## III.—GOVERNMENT MOTION.

### ELECTION OF A MEMBER TO THE STATE LIBRARY COMMITTEE.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

" That in pursuance of Rule 2 (1) (v) of the Madras Public Libraries Rules, 1950, this Assembly do proceed on a date to be fixed by the Hon. the Speaker to elect one person to the State Library Committee constituted under section 3 of the Madras Public Libraries Act, 1948 (Madras Act XXIV of 1948) ".

The motion was put and carried.

MR. SPEAKER : With reference to the motion of the Minister for Finance and Education regarding the election of one Member of this Assembly to the State Library Committee, I fix 11 a.m. on Monday, the 3rd November 1958 as the time within which nomination papers of candidates for election to the State Library Committee should reach the Secretary. Nomination forms can be had on application to the Secretary.

The nomination papers will be taken up for scrutiny at 1 p.m. on Monday, the 3rd November 1958. I also fix 3 p.m. on Monday, the 3rd November 1958 as the last hour and date for the withdrawal of candidature.

If the number of candidates nominated exceeds the number of seats to be filled, namely one, a poll will be taken on Tuesday, the 4th November 1958 between the hours of 9 a.m. and 1 p.m.

The election will be by the ordinary method and not according to the principle of proportional representation by means of the single transferable vote.

## IV.—GOVERNMENT BILLS.

### (1) THE MADRAS INDUSTRIAL ESTABLISHMENTS (NATIONAL AND FESTIVAL HOLIDAYS) BILL, 1958 (L.A. BILL NO. 19 OF 1958).

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move—

" That the Madras Industrial Establishments (National and Festival Holidays) Bill, 1958 (L.A. Bill No. 19 of 1958) as amended by the Select Committee be taken into consideration ".

இந்த மசோதா பொறுக்குக் கமிட்டியால் திருத்தப்பட்டது. இதை யோசனைக்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று நான் பிரேரே பிக்கிறேன். இந்த மசோதா இந்த மன்றத்தில் 3–5–58-ல் விவாதிக்கப்பட்டு பொறுக்குக் கமிட்டிக்கு விடப்பட்டது. பொறுக்குக் கமிட்டி இதை நன்றாக பரிசீலனை செய்து சில திருத்தங்கள் செய்திருக்கின்றன. முக்கியமான திருத்தங்கள் 3-வது ஷரத்துக்கும் 5-வது ஷரத்துக்கும் செய்யப்பட்டிருக்கின்றன. முன்பு (ஷரத்து 3) மே மாதம் முதல் தேதி விடுமுறை நாளாக இருக்கவேண்டும் என்று தொழிலாளர்களிடையே பெரும் பகுதியினர்கள் விரும்பினால் அவ்வாறு விடுமுறை நாளாக விட
10-10 a.m. வேண்டும் என்ற பிரிவு இருந்தது. ஆனால் அது அனுவசியமான சர்ச்சைகளையும் தகராறுகளையும் உண்டாக்கும் என்ற காரணத்தினால் பொறுக்குக் கமிட்டியில் அதைப்பற்றி யோசித்து தொழிலாளர்கள் அந்த தினத்தை விடுமுறை தினமாகக் கருதவேண்டுமென்றால் இன்ஸ்பெக்டர் அதை பரிசீலனை செய்து ஷரத்து மூன்றின்கீழ் பண்டிகை தினங்களில் ஒரு நாளாக விடுமுறை அளிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.]

31st October 1958] [Sri M. Bhaktavatsalam]

மேலும் முப்பது நாட்கள் தொடர்ந்து அவர்கள் வேலை செய்திருந்தால் இந்த விடுமுறைக்கு அவர்கள் தகுதி உள்ளவர்கள் என்ற பிரிவு இருந்தது. தேசீய விடுமுறை நாளாக இரண்டு நாட்கள் லீவு விடப்பட்டிருக்கிறது. இவைதான் முக்கியமான மாறுதல்கள்.

மேலும் பொறுக்குக் கமிட்டியில் சில அங்கத்தினர்கள் ஒன்றிரண்டு யோசனைகளைச் சொன்னார்கள். அவை ஏற்கப்படவில்லை. இப்போது மீண்டும் அவற்றை திருத்தங்கள் வாயிலாக வலியுறுத்தினால் அவற்றை அரசாங்கம் ஏன் ஏற்க முடியாமல் இருக்கிறது என்பதற்கு நான் விவரமாக பதில் சொல்லுகிறேன்.

தொழிலாளர்களுக்கு விடுமுறை கொடுக்கும் பிரச்னை பலநாட்களாக இருந்து வருகிறது. சிலர் தாராளமாகக் கொடுத்துக் கொண்டும் வருகிறார்கள். பெரும்பாலான தொழிற்சாலைகளில் இந்த விடுமுறை என்பது மிகவும் குறைவு. ஏழு நாட்கள் வேண்டாம், ஐந்து நாட்கள் கூட கிடையாது. ஆகவே சட்ட பூர்வமாக விடுமுறை நாட்கள் இன்னது என்று நிர்ணயிக்க வேண்டுமென்ற பிரச்னை வெகு நாட்களாக இருந்து வருகிறது. இரண்டு நாட்களுக்கு முன்பு மத்திய அரசாங்கமும் தொழிலாளர்கள், தொழில் அதிபர்கள் இவர்களோடுகூட இந்தப் பிரச்னையை விவாதித்திருக்கிறது. விடுமுறை என்பதையே தொழிலதிபர்கள் ஒப்புக் கொள்ளவில்லை. அவர்கள் இவ்வளவு விடுமுறை கொடுக்க முடியாது என்று கூறிக் கொண்டு வந்தார்கள். இருந்தாலும் விடுமுறை கொடுக்கத்தான் வேண்டும் என்று மத்திய அரசாங்கம் கருதியது. இந்த அரசாங்கமும் கருதியது, இதர அரசாங்கங்களும் கருதின. குறைந்தபட்சம் இரண்டு தேசீய விடுமுறை நாட்கள், ஐந்து பண்டிகை நாட்கள் கொடுக்கத்தான் வேண்டுமென்று எல்லோரும் கருதினோம். சென்னையில்கூட ஸ்டாண்டிங் கமிட்டியில் விவாதிக்கப்பட்டிருக்கிறது. ராஜ்ய அரசாங்கங்களை இந்த மாதிரியாகச் சட்டம் செய்ய வேண்டுமென்றார்கள். அதற்குமேல் இந்த மசோதா தயாரிக்கப்பட்டது. அப்போதும் கூட விடுமுறை என்று அளித்தால் உற்பத்தி பாதிக்கப்படும் என்று தொழிலதிபர்கள் தங்கள் ஐயத்தைத் தெரிவித்தார்கள். இருந்தாலும் இந்த அரசாங்கம் குறைந்தபட்சம் ஏழு நாட்களாவது கொடுக்கத்தான் வேண்டுமென்று இந்த மசோதாவைக் கொண்டு வந்திருக்கிறது.

விடுமுறை என்றால் எல்லோரும் வரவேற்கிறார்கள். விடுமுறை வேண்டும் என்று கோரும் மனப்பான்மையைச் சற்று சிந்திக்க வேண்டும். நாட்டின் செல்வம் வளரவேண்டும். வாழ்க்கைத்தரம் உயரவேண்டும் என்றால் நம் மக்கள் உழைப்புக்கு அஞ்சக்கூடாது. இருந்தாலும் விடுமுறை கொடுக்கத்தான் வேண்டும். ஆனால் விடுமுறை தினத்தில் அவர்கள் வேலை செய்யும்படியாகச் சொல்லப்பட்டால் இரட்டிப்புச் சம்பளம் கொடுக்கப்படவேண்டுமென்பது இந்த மசோதாவின் அடிப்படை. பொறுக்குக் கமிட்டியினால் நல்ல முறையில் பரிசீலிக்கப்பட்டு தயாரிக்கப்பட்டிருக்கிற இந்த மசோதாவை சபை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : Motion moved—

"That the Madras Industrial Establishments (National and Festival Holidays) Bill, 1958 (L.A. Bill No. 19 of 1958) as amended by the Select Committee be taken into consideration."

I would like to know for how long we will have general discussion on the Bill and what time will be required for the clause by clause consideration of the Bill.

THE HON. SRI C. SUBRAMANIAM : I think one hour will be sufficient for the consideration and passing of the Bill.

MR. SPEAKER : I think we can have general discussion for 40 minutes and clause by clause consideration for 20 minutes. I think that will be all right.

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir.

*SRI V. K. KOTHANDARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, இப்போது நமக்கு முன்னால் கொண்டுவரப்பட்டிருக்கிற விடுமுறை மசோதாவை நான் வரவேற்கக்கூடிய அதே நேரத்தில் ஒரு சில அபிப்பிராயங்களையும் எடுத்துக்காட்ட விரும்புகிறேன். இந்த மசோதாவை நாம் கொண்டு வருவதற்கு முன்னாலேயே இப்போது எந்த எந்த தொழிற்சாலைகளில் எந்த எந்த மாதிரியாக விடுமுறை கொடுக்கப்பட்டு வருகிறது என்பதை நாம் பார்த்தாக வேண்டிய நிலைமையில் இருக்கிறோம். இன்றைய தினம் பி. அண்டு ஸி. மில்லை எடுத்துக் கொண்டால் 11 தினங்கள் விடுமுறை பல நாட்களாகக் கொடுக்கப்பட்டு வருகிறது. ஹார்வீ மில்லில் 11 தினங்கள் கொடுக்கப்படுகிறது.

(Deputy Speaker in the Chair.)

சென்னையிலேயே இருக்கக்கூடிய சிம்சன் தொழிற்சாலையில் 14 தினங்கள் கொடுக்கப்படுகிறது. அதே போன்று ஷாப்பு ஆக்டை எடுத்துக்கொண்டாலும் வாரத்திற்கு ஒரு நாள் சம்பளத்துடன் விடுமுறை வருகிறது. பண்டிகை தின விடுமுறை, 36 தினங்கள் இருக்கிறது. ஹோ அண்டு கோ. கம்பெனியை எடுத்துக் கொண்டால் 21 தினங்கள் விடுமுறை கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்படியெல்லாம் இருக்கும்போது இன்றைக்கு நாம் 7 தினங்கள் விடுமுறை அளிக்க வேண்டுமென்று சட்டம் கொண்டு வருகிறோம். இது அவ்வளவு சரியல்ல. ஆகவே 15 தினங்களாவது விடுமுறை கண்டிப்பாக அளிப்பதாக இருக்கவேண்டும். இல்லை 10 தினங்களாவது கொடுத்தால்தான் நல்லது என்று இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லி கொள்ள விரும்புகிறேன். இதையும் சர்க்கார் கவனிக்க வேண்டும்.

அதே நேரத்தில் மே தினத்தை விடுமுறை தினமாக விடவேண்டும். அகில உலகத் தொழிலாளர் தினமாக அன்றைக்கு உலகம் முழுவதும் கொண்டாடப்படுகிறது ஆனால் பொறுக்குக் கமிட்டியில் இந்த ஷரத்து சம்பந்தமானதைத் திருத்தியிருக்கிறார்கள். மே விடுமுறை தினமாக விட வேண்டுமென்று தொழிலாளர்களில் பெரும்பகுதியினர் விரும்பினால் இன்ஸ்பெக்டர் இதைப் பரிசீலனை செய்து பண்டிகை நாட்களில் ஒரு நாளாக விடுமுறை அளிக்க வகை செய்யப்பட்டிருக்கிறது என்று அமைச்சர் அவர்கள் சொன்னபோது நான் மிகவும் வருத்தப்பட்டேன். அதிகாரிகளிடத்தில் போகக் கூடிய விஷயங்கள் எவ்வாறு முடிவு செய்யப்படுகின்றன, எத்தனை நாட்கள் தாமதமாகின்றன என்று நமக்குத் தெரியும். ஆகவே கண்டிப்பாக மே தினத்தை விடுமுறை தினமாக டிக்ளேர் பண்ண வேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன். சம்பளத்துடன் மற்றொரு விடுமுறை தினத்தில் அதற்குப் பதிலாக வேலை செய்துவிட வேண்டுமென்று செய்தாலும் போதாது. அதே போன்று 30 தினங்கள் தொடர்ந்தாற்போல வேலை செய்தால் ஒரு நாள் விடுமுறை கொடுக்க வேண்டுமென்ற விதி இருக்கிறது. இன்றைக்கு லீவு வேண்டுமென்று தொழிலாளர்கள் எழுதிக் கொடுத்தாலும், லீவு தருவதாகச் சொல்லிவிட்டு, கடைசியில் அதை ஆப்செண்ட் என்று பலவிடங்களில் போட்டு வருகிறார்கள் என்பது நமக்குத் தெரியாதது அல்ல. இப்படிப்பட்ட நிலைமைகள் எல்லாம் இருக்கிற காரணத்தினால்தான் 20 தினங்களாவது விடுமுறை கொடுக்கப்படவேண்டுமென்று முன்பு சொன்னோம்.

அதே போன்று சர்க்கார் நிறுவனங்களிலும் வசதி இருக்கவேண்டும். அவர்களுக்கு விதிவிலக்கு கொடுப்பது சரியல்ல. இன்றைக்கு நாம் பார்ப்போமானால் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் லேபர் பாலிஸி தனியார் நிறுவனங்கள், சர்க்கார் நிறுவனங்கள் ஆகிய இரண்டிலும்

வேலை செய்யக்கூடிய தொழிலாளர்களுக்கு ஒரேவிதமான பாதுகாப்பு, வசதி எல்லாம் இருக்கவேண்டுமென்று உள்ளது. அப்படி இருக்கும்போது இன்றைக்கு இந்த மசோதாவில் சர்க்கார் நிறுவனங்களுக்கு விதிவிலக்கு என்று சொல்லியிருப்பது முன்னுக்குப் பின் முரணான விஷயமாக இருக்கிறது. இந்தக் காரணத்தினால் விதிவிலக்கு என்பதை அறவே எடுத்து விடவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

மேலும் தமிழ் வருஷப் பிறப்பு அன்றைக்கும் விடுமுறை அளிப்பதற்கு வசதி செய்யவேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறேன். இந்த ராஜ்யம் தமிழ் நாடு என்று வழங்கப்படுகிறது ; தமிழ் வளர வேண்டும் என்று நாம் விரும்புகிறோம். இந்த ராஜ்ய சட்டசபையில் நடவடிக்கைகள் எல்லாம் தமிழிலேயே நடக்க வேண்டுமென்று விரும்புகிறோம். அப்படி இருக்கும்போது, நாம் தமிழ் வருஷப் பிறப்பு தினத்திற்கு தேசீய விடுமுறை அளித்தால்தான் நாம் தமிழுக்கு முக்கியத்துவம் அளித்தவர்களாவோம், தமிழுக்கும் தமிழ் நாட்டிற்கும் மதிப்பளித்தவர்களாவோம். எனவே. தமிழ் வருஷப் பிறப்பு நாளும் தேசீய விடுமுறை நாளாக ஆக்கப்பட வேண்டும். மசோதாவில் பண்டிகைகளுக்காக ஐந்து விடுமுறை நாட்கள் அளிக்கப்பட்டிருக்கிறது. இதை ஆறு நாட்களாக உயர்த்த வேண்டும். தேசீய விடுமுறை நாட்களாகிய ஜனவரி 26-ம் தேதி, ஆகஸ்டு 15-ம் தேதி ஆகிய இரு தினங்களுக்கு மட்டும் எல்லாத் தொழிலாளர்களுக்கும் சம்பளத்துடன் விடுமுறை அளிக்கப்படுவதற்கு மசோதா வகை செய்கிறது ; தேசீய தினங்களின் முக்கியத்துவத்தை நாம் உணர்ந்திருப்பதால் தான் மசோதாவில் அவ்வாறு நாம் ஷரத்துகளை வகுத்திருக்கிறோம். அதாவது விடுமுறை தினத்திற்கு முன்பு தொழிலாளி தொடர்ந்து 30 நாட்கள் வேலை செய்திருந்தால் தான் அவனுக்கு அந்த தினத்தில் சம்பளத்துடன் விடுமுறை அளிக்கப்படும் என்ற நிபந்தனைகளிலிருந்து இந்த தேசீய தினங்களுக்கு விலக்கு அளித்திருக்கிறோம். எனவே, தமிழ் வருடப் பிறப்பு தினத்தையும், மே தினத்தையும் தேசீய தினங்கள் என்று கருதி அவைகளையும் தேசீய விடுமுறை நாட்களாக ஆக்க வேண்டும் ; அவைகளுக்கும் முன்பு நான் குறிப்பிட்ட விதிவிலக்கை அளிக்க வேண்டும் என்று சொல்லிக்கொள்கிறேன். அத்துடன் பண்டிகை விடுமுறை நாட்களை ஆறு ஆக அதிகரித்து, தேசீய பண்டிகை விடுமுறை நாட்களை 10-ஆகவாவது உயர்த்த வேண்டுமென்று சொல்லிக் கொள்கிறேன். மேலும், 5-வது பிரிவில், "தொடர்ந்து 30 நாட்கள் வேலை செய்திருக்க வேண்டும்" என்று இருப்பதை "தொடர்ந்து 20 நாட்கள் வேலை செய்து இருக்க வேண்டும்" என்று மாற்ற வேண்டுமென்று கூறிக்கொண்டு என் வார்த்தையை முடித்துக் கொள்கிறேன்.

* SRI J. MATHA GOWDER : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, தேசீய பண்டிகை விடுமுறை நாட்கள் மசோதாவை ஆதரித்து சில வார்த்தைகளை சொல்ல விரும்புகிறேன். தொழிலாளர்களுக்கு நிறைய நாட்கள் விடுமுறை அளிப்பது அவசியம். ஏற்கெனவே, தொழிலாளர்களுக்கு 20 நாட்களுக்கு ஒரு நாள் வீதம் விடுமுறை தினங்கள் அளிக்க வேண்டும் என்று விதித்திருக்கிறோம். இந்த மசோதாவில், தேசீய தினங்களுக்காக இரண்டு நாட்களும், பண்டிகைகளுக்காக 5 நாட்களும் விடுமுறை நாட்கள் அளித்திருக்கிறோம். பண்டிகை தினங்களுக்காக விடுமுறை நாட்களுடன் மே தினத்திற்கான விடுமுறை நாளையும் சேர்ப்பது அவ்வளவு உசிதமல்ல என்று நான் சொல்ல விரும்புகிறேன். ஏனென்றால், மே தினம் என்பது உலகத் தொழிலாளர்களின் கொண்டாட்ட தினம். தமிழ் நாட்டில் பல பண்டிகைகள் கொண்டாடப்படுகின்றன. அந்த தினங்களில் தொழிலாளர்களுக்கு சம்பளத்துடன் ரஜா இருக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் தான் இந்த விடுமுறை நாட்களை நாம் அளிக்கிறோம். அப்படிப்பட்ட பண்டிகை விடுமுறை நாட்களுடன் மே தின விடுமுறை நாளைச் சேர்ப்பது உசிதமல்ல. மே தினம் போன்ற கொண்டாட்ட தினங்களுக்கு விடுமுறை அளிப்பது அவ்வளவு உசிதமல்ல. மேலும், அரசியல் கட்சிகளும் தொழிற் சங்கங்களும் மே தினத்தைக் கொண்டாடுவது பற்றி வேறுபட்ட அபிப்பிராயங்கள் கொண்டிருக்கின்றன. சில தொழிலாளர்கள் மே தினத்தைக்

கொண்டாடுவது அவசியமில்லை என்று கருதுகிறார்கள். அவர்களுக்கு அந்த தினத்தில் விடுமுறை வேண்டியதில்லை. மே தினத்தைக் கொண்டாட வேண்டுமென்ற விருப்பம் சில பிரிவினருக்குத் தான் அந்த தினத்தன்று விடுமுறை வேண்டியிருக்கும்: அல்லது அந்த தினத்தில் தொழிலாளர்களுக்கு விடுமுறை அளிக்க வேண்டுமென்று சில அரசியல் கட்சிகள் தான் விரும்புகின்றன என்று நினைக்கிறேன். எனவே, மே தினத்திற்கு விடுமுறை அளிப்பது அவசியமில்லை என்று சொல்லிக்கொள்கிறேன்.

சர்க்கார் துறைகளில் இருக்கும் ஊழியர்களுக்கும் இந்தச் சலுகைகளைக் கொடுக்கவேண்டுமென்பதை நானும் ஆமோதிக்கிறேன். ஆனால் இந்த சந்தர்ப்பத்தில் ஒன்று சொல்ல விரும்புகிறேன். குந்தாத் திட்டம் போன்ற அத்தியாவசியமான திட்டங்களைக் காலாகாலத்தில் சர்க்கார் நிறைவேற்ற வேண்டும். அந்தத் திட்டங்களில் வேலை செய்யும் தொழிலாளர்களை அரசாங்கத்தில் வேலை செய்யும் தொழிலாளர்கள் என்று கருதிவிட முடியாது. திட்டம் நிறைவேறாதபடி செய்ய வேண்டுமென்ற நோக்கத்துடன் சில அரசியல் கட்சிகள் அந்தத் திட்டங்களில் சம்பந்தப்பட்டுள்ள தொழிலாளர்களைக் கிளர்ச்சி செய்யத் தூண்டுகிறார்கள். அந்தக் திட்டங்களில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்கள் தொழிற்சங்க நடவடிக்கைகளிலோ நேரடி நடவடிக்கைகளிலோ இறங்கக் கூடாது என்று சட்டமியற்றலாம் என்று கூடக் கூறுவேன். அந்தத் திட்டங்களில் வேலை செய்யும் தொழிலாளர்கள் தாற்காலிகத் தொழிலாளர்கள்.

தொழிலாளர்களுக்கு தேசிய தினங்களிலும் பண்டிகை தினங்களிலும் விடுமுறை அளிப்பதற்கான மசோதா சபையில் முதன் முதலில் கொண்டு வரப்பட்டபோது அதன் மீது விவாதம் நடத்தினோம். அது பொறுக்குக் கமிட்டியால் பரிசீலிக்கப்பட்டு திருத்தங்களுடன் இப்போது இங்கே மறுபடியும் கொண்டுவரப்பட்டிருக்கிறது. அப்படி இருக்கும்போது இந்த மசோதாவிற்கு திருத்தங்கள் கொடுக்க வேண்டியது அவசியமில்லை. தொழிலாளர்களுக்கு இன்னும் விடுமுறை நாட்கள் அளிக்க வேண்டுமென்றால், தொழில் அதிகாரிகளின் சிபாரிசுப்படி வரும் ஆண்டுகளில் இன்னும் அதிகமாக விடுமுறை நாட்கள் அளிப்பதற்கு சட்டத்தைத் திருத்தலாம்.

நான் ஏற்கெனவே கூறியுள்ள காரணங்களால், சர்க்கார் துறைகளில் குந்தாத் திட்டம் போன்ற அத்தியாவசியமான திட்டங்களில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு இந்த விடுமுறைகளை அளிக்க வேண்டுமென்பதை வற்புறுத்த முடியாத நிலையில் இருக்கிறேன் என்று சொல்லிக் கொள்கிறேன்.

முனிசிபாலிடிகள், பஞ்சாயத்துக்கள் போன்ற இடங்களில் வேலை செய்யும் சில தொழிலாளர்களுக்கு இந்த விடுமுறைகளை நிச்சயம் அளிக்க வேண்டும். அந்த இடங்களில் தெருக்களை சுத்தம் செய்யும் தொழிலாளர்கள் மிகவும் கஷ்டப்பட்டு உழைப்பவர்கள். அவர்களுக்கு எந்த விதமான சலுகையும் இல்லை. அவர்களுக்கு இந்த விடுமுறைச் சலுகைகளை அளிக்க வேண்டுமென்று சொல்லிக்கொண்டு என் வார்த்தையை முடித்துக் கொள்கிறேன்.

**Sri S. LAZAR** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவைக் கொண்டுவந்திருக்கும் இந்த அரசாங்கத்தைப் பாராட்டுகிறேன். தொழிலாளர்களுக்கு தேசீய, பண்டிகை தினங்களுக்காக எத்தனை நாட்கள் விடுமுறை அளிக்க வேண்டுமென்று இந்த மசோதாவில் விதிக்கப்பட்டிருக்கிறதோ அதை விட அதிகமான நாட்கள் அந்த தினங்களுக்காக தொழிலாளர்களுக்கு சில தொழிற்சாலைகள் விடுமுறை அளிக்கப் பட்டுவருகிறது என்றும், இந்த மசோதாவைக் சட்டமாக்குவதால் தொழிலாளர்களுக்கு என்ன பயன் ஏற்பட்டுவிடப்போகிறது என்றும் சிலர் பேசுவதை நான் பார்க்கிறேன். இந்த மசோதாவில் கொடுக்கப்பட்டிருக்கும் விடுமுறை நாட்களை விட அதிகமான நாட்கள் விடுமுறை தொழிலாளர்களுக்கு சில பெரிய தொழிற்சாலைகளில் அளிக்கப்பட்டு வந்திருக்கக்கூடும். இந்த மசோதாவை நன்றாகப் பரிசீலித்துப்பார்த்தால் "இண்டஸ்ட்ரீயல் எஸ்டாப்ளிஷ்மெண்ட்ஸ்" எவை எவை என்பது வரையறுக்கப்

31st October 1958] [Sri S. Lazar]

பட்டிருப்பது தெரியும். அந்த வரையறையின் கீழ் ஆயிரக்கணக்கான சிறு தொழிற்சாலைகளும் பெரிய கடைகளும் எத்தனையோ தொழில் நிலையங்களும் வருகின்றன. எனவே அவைகளில் வேலை செய்யும் லட்சக் கணக்கான தொழிலாளர்களுக்கு, இதுவரை கிடைக்காத இந்த 7 விடுமுறை நாட்கள், மசோதா சட்டமான பிறகும் கிடைக்கும். இந்த 7 விடுமுறை நாட்களில் 2 தேசிய தினங்களுக்காகவும் மீதி 5 பண்டிகைகளுக்காகவும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. பண்டிகை விடுமுறை நாட்களுக்கான தினங்களை நிர்ணயிக்கும் உரிமை முதலாளிகளுக்கு மட்டுமே கொடுக்கப்படாமலிருப்பது மிக மிகப் பாராட்டத்தக்க அம்சமாகும். முதலாளிகளும் தொழிலாளிகளும் இன்ஸ்பெக்டரும் சேர்ந்து அவைகளை நிர்ணயிக்க வேண்டுமென்று விதித்திருப்பது மிகவும் பாராட்டத்தக்கது. அந்த உரிமையை முதலாளிகளுக்கு அளித்தால் எதிர்பார்க்கக்கூடிய பலன் ஏற்படாமல் போகும். சர்க்கார் அந்த உரிமையை முதலாளிகளுக்கு அளிக்காததின் மூலம், தாங்கள் முதலாளிகளின் நலன்களை கவனித்துவிட்டு தொழிலாளிகளின் நலன்களைப் புறக்கணித்துக் கொண்டிருக்கவில்லை, தொழிலாளரின் நலனிலேயே அதிக அக்கறை கொண்டிருக்கிறார்கள் என்பதை நன்றாக எடுத்துக் காட்டியிருக்கிறார்கள்; இந்த அரசாங்கத்தின் கொள்கையும் நோக்கமும் முதலாளிகளுக்கும் முதலாளிகளின் கையாட்களுக்கும் சலுகைகள் கொடுப்பதுதான் என்று சொல்லுவது தவறு என்பதை அதன் மூலம் நன்றாக எடுத்துக்காட்டியிருக்கிறார்கள். தாங்கள் தான் தொழிலாளர்களின் நலன்களைப் பாதுகாப்பதாக சில அரசியல் கட்சிகள் பறைசாற்றி வருகின்றன. ஆனால் காங்கிரஸ் அரசாங்கத்தார் தொழிலாளர் நலன்களைப் பாதுகாப்பதற்காக பல சட்டங்களை இயற்றியிருக்கிறார்கள். நாடு சுதந்திரமடைந்த ஆண்டாகிய 1947-லிருந்து இன்று வரையில், தொழிலாளர் நலன்களைப் பாதுகாப்பதற்காக சுமார் 20—25 சட்டங்கள் இயற்றப்பட்டிருக்கின்றன. மாநில சர்க்காராலும் மத்திய சர்க்காராலும் அந்தச் சட்டங்கள் இயற்றப்பட்டிருக்கின்றன.

இந்தச் சட்டங்களின் வாயிலாக தொழிலாளர்களுக்கு ஏற்படக்கூடிய சலுகைகளும் நலன்களும் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே வருகின்றன. இது போன்ற சட்டங்கள் குறிப்பிட்ட தொழிற்சாலைகளுக்கு மட்டுமல்ல, விவசாயத் துறையிலும்கூட வெகு வேகமாக அரசாங்கம் செய்து கொண்டு வருகிறது. ஆகவே இதுபோன்ற நலன்களை, தொழிலாளர்களின் நன்மைக்காக செய்யப்படும் சட்டங்களையும், அதற்கான வாய்ப்புகளையும் செய்யும்போது ஒரு சில அரசியல் கட்சிகள் தங்கள் சுயநலத்திற்காக தாங்கள் தான் எல்லாவற்றையும் செய்து வருகிறோம் என்ற தப்பானதொரு அபிப்பிராயத்தை மக்களிடையே பரப்பிக் கொண்டு வருகிறார்கள். நான் ஏற்கனவே சொன்னதுபோல், இச்சட்டத்தின் வாயிலாக தொழிலாளர்களுக்கு ஏழு நாட்கள் சம்பளத்தோடு கூடிய விடுமுறை கட்டாயமாக அளிப்பதோடு கூட அவர்களுக்கு உற்சாகம் ஊட்டக்கூடிய முறையில்தான் இந்த மசோதா அமைந்திருக்கிறது. தொழிலாளர்களுக்காக நல்ல பல சட்டங்கள் இயற்றப்பட்டு அவைகளை அவர்கள் இன்றைய தினம் அனுபவித்துக் கொண்டு வருகிறார்கள். தேசிய நாட்களுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டுமென்ற எண்ணத்தினால்தான் ஆகஸ்ட் 15-ம் தேதியும், ஜனவரி 26-ம் தேதியும் கட்டாய விடுமுறை நாட்களாக்கப்பட்டிருக்கின்றன. தேசிய தினங்களை எல்லோரும் கொண்டாட வேண்டுமென்ற அடிப்படையில்தான் இந்த இரண்டு நாட்களையும் கட்டாய விடுமுறை நாட்களாக வைத்து அந்நாட்களுக்கு அவர்களுக்குச் சம்பளமும் கொடுக்க வேண்டுமென்று இச்சட்டம் அமைந்திருக்கிறது. இதில் குறிப்பாக கவனிக்க வேண்டியது பெரிய தொழிற்சாலைகளைப் பொறுத்துப் பார்க்கிறபோது, நேரடியாக தொழிற்சாலைகளில் வேலை பார்த்து வரும் ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் இருந்தபோதிலும் கூட அவைகளில் மறைமுகமாக ஆயிரக்கணக்கான தொழிலாளர்களையும் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். இது, அரசாங்கத்தின் கவனத்திற்கு அடிக்கடி வந்துதான் இருக்கும். உதாரணமாக சிமெண்ட் தொழிற்சாலையை எடுத்துக் கொள்ளலாம். சிமெண்ட் தொழிற்சாலையில் ஏறக்குறைய

2,500 முதல் 3,000 கூலியாட்கள் வேலை செய்து வரக்கூடும். அதே சமயத்தில் மானேஜ்மென்டின் பிடியில் இல்லாத கண்ட்ராக்டர்கள் மூலம் பல ஆயிரக்கணக்கான பேர்கள் வேலை செய்து வருகிறார்கள். அதாவது, கண்ட்ராக்டர்கள் அமர்த்திக் கொள்பவர்கள். ஆகவே, அரசாங்கம் இப்பொழுது கொண்டு வந்திருக்கும் இந்த மசோதாவின் மூலம் தொழிலாளர்களுக்குக் கிடைக்க வேண்டிய பலன், இந்த கண்ட்ராக்டர்களின் கீழ் வேலை செய்யும் தொழிலாளர்களுக்குக் கிடைக்காது என்பதை நான் அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். நான் இதைக் குறிப்பிடுவதன் நோக்கம் என்னவென்றால், தொழிலாளர்களின் நலனுக்காகச் செய்யப்படுகிற இது போன்ற சட்டங்களின் நலன்கள், பலன்கள் அத்தனையும் தொழில் துறையில் இருக்கக்கூடிய அத்தனை தொழிலாளர்களுக்கும் கிடைக்கவேண்டுமென்றால், ஆரம்பமாகவாவது பெரிய பெரிய தொழிற்சாலைகளில் 500 அல்லது 1,000 நபர்களுக்கு மேல், தொழிலாளர்களுக்கு மேல் வேலை செய்யக் கூடிய தொழிற்சாலைகளிலாவது, கூலியாட்களை நேரடியாக வைத்துக் கொள்ளவேண்டும், இந்த கண்ட்ராக்ட் முறை இருக்கக்கூடாது என்ற முறையில் சரியானதொரு சட்டம் கொண்டு வந்தால் உள்ளபடியே நாம் கைக்கொண்டிருக்கும் கொள்கைகளும், நாம் இயற்றக்கூடிய சட்டங்களும் தொழிலாளர்களுக்கு நல்லமுறையில் பலனளிப்பதாகயிருக்கும். தொழிலாளர்களின் நலனிற்காக இச்சட்டம் கொண்டு வரும் இந்நேரத்தில் நான் மற்றொரு முக்கியமான குறிப்பையும் அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். ஒரு சில பெரிய தொழிற்சாலைகளில் தொழிலாளர்கள் நேரடியாக வேலை செய்து வருவதன் காரணமாக இப்பொழுது அரசாங்கம் இயற்றும் சட்டங்களின் பலன் அவர்களுக்கு கிடைத்துக் கொண்டுவருகின்றன. ஒரு சில சுயநலம் கொண்ட தொழில் அதிபர்கள், மானேஜ்மென்டார் இந்தச் சட்டத்தினால் தொழிலாளர்களுக்குக் கிடைக்கக் கூடிய பலன்கள் அவர்களுக்கு கிடைக்கக் கூடாது என்ற எண்ணத்தில் ஆங்காங்கு புதிய ஒரு சிருஷ்டியை உண்டு பண்ணிக் கொண்டு வருகிறார்கள். அதற்குப் பெயர்தான் "லேபர் காண்ட்ராக்ட் சொஸைட்டி" என்பதாகும். லேபர் காண்ட்ராக்ட் சொஸைட்டிகள் இருக்க வேண்டியது அவசியம்தான். ஆனால் எந்த இடத்திலே அவைகள் இருக்க வேண்டுமென்பதை நாம் சற்று சிந்தித்துப் பார்க்கவேண்டும். அவைகள் இருக்க வேண்டியது பெரிய தொழிற்சாலைகள் இருக்கக் கூடிய இடங்களில் அல்ல. ஆனால் மற்றவிடங்களில்தான் அவைகள் இருக்க வேண்டும். இந்தச் சட்டங்கள் அமுலாகாத இடங்களில் அவைகள் இருக்கலாம். அப்பொழுது காண்ட்ராக்டர்கள் அடையும் லாபத்தை தொழிலாளர்கள் தங்களுக்குள் பங்கிட்டு எடுத்துக் கொள்ள வாய்ப்பிருக்கும். அது வரவேற்கத்தக்கதே. இதுபோன்ற லேபர் காண்ட்ராக்ட் சொஸைட்டிகளை சிமெண்ட், டெக்ஸ்டைல்ஸ் போன்ற தொழிற்சாலைகளில் புகுத்தினால் தொழிலாளர்களுக்குக் கிடைக்க வேண்டிய அத்தனை நலன்களும் அவர்களுக்குக் கிடைக்காது. அதே போன்று இந்த மாதிரி சட்டங்களினால் அப்படிப்பட்ட சொஸைட்டிகளுக்கும் லாபம் கிடைக்காது. அதன் கீழ் வேலை செய்யும் லட்சக்கணக்கான தொழிலாளர்களுக்கும் இவைகளினால் ஏற்படக் கூடிய நன்மை கிடைக்காது. ஆகவே, லேபர் காண்ட்ராக்ட் சொஸைட்டிகளை பெரிய தொழிற்சாலைகளில் புகுத்துவது கலவரத்தைத்தான் உண்டு பண்ணுகிறது. ஆகவே அவர்களுக்கு என்று தனியாக இடங்களை ஒதுக்கி, எந்தெந்த தொழிற்சாலைகளில், எந்தெந்த தொழில் நிலையங்களில் இது போன்ற லேபர் சட்டங்கள் அமுலுக்கு வர முடியாமல் இருக்கின்றனவோ அப்படிப்பட்ட இடங்களில் மட்டும் இவைகளைப் புகுத்தினால் நல்லது. அடுத்தபடியாக, தொழிலாளர்களின் நலனுக்காக கோடிக்கணக்கான ரூபாய் . .

DEPUTY SPEAKER : I want the hon. Member to be brief and not to take the time of the House in referring to such matters.

SRI S. LAZAR : கோடிக்கணக்கான ரூபாய்கள் செலவு செய்யப்பட்டு இயங்கி வருகிற தொழிற்சாலைகளில் . . .

31st October 1958]

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இந்த மசோதா தொழிலாளர்களுக்கு விடுமுறை கொடுப்பதைப் பற்றி மட்டுந்தான் ஆகவே மற்ற விஷயங்களைப்பற்றி கனம் அங்கத்தினர் பேசினாலும் அவைகளைப் பற்றி என்னால் பதிலளிக்க இயலாது.

DEPUTY SPEAKER: I have already drawn the attention of the hon. Member to it.

SRI S. LAZAR: Very good Sir. தொழிலாளர்களின் நலனுக்காகக் கொண்டுவரப்பட்டிருக்கும் இந்த மசோதாவைப் பற்றி பேசும் போது, இதை விட முக்கியமான ஒரு சில நலன்களை அரசாங்கம் செய்ய வேண்டுமென்று சொல்வதை அரசாங்கம் மனதில் வைத்துக் கொண்டு செயலாற்றினால் உள்ளபடியே இது இன்னும் நல்லமுறையில் அமைய முடியும் என்பதினால்தான் குறிப்பிடுகிறேன். தவிர இப்பொழுது கொண்டு வரப்பட்டிருக்கும் மசோதாவில் குற்றம் கண்டு பிடிக்கவேண்டுமென்ற நோக்கத்தினால் அல்ல நான் இவைகளைக் கூறுவது. ஆகவே, நான் சொன்ன விஷயங்களை அமைச்சர் அவர்கள் மனதில் வைத்துக்கொண்டு தகுந்த சட்டங்கள் கொண்டு வரவேண்டுமென்று சொல்லிக் கொண்டு இம்மசோதாவை மீண்டும் ஒரு முறை வரவேற்றுக் கொண்டு எனது பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

SRI A. GOVINDASAMY: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, தொழிலாளர்கள் அனுபவிப்பதற்காக ஐந்து விழா நாட்கள் விடுமுறையும், இரண்டு தேசீய விடுமுறை நாட்களும் கொடுப்பது குறித்து அரசாங்கம் கொண்டு வந்திருக்கும் இந்த மசோதாவை நான் பொதுவாக வரவேற்கிற நேரத்தில் இதில் இருக்கிற ஒரு சில குறைபாடுகளையும் நான் இங்கு எடுத்துரைக்கக் கடமைப்பட்டிருக்கிறேன். எப்படி அரசாங்கம் குடியரசு தினமாகிய ஜனவரி 26-ம் தேதிக்கும், சுதந்திர நாளாகிய ஆகஸ்டு 15-க்கும் கட்டாய விடுமுறை அளிக்க வேண்டுமென்று அவைகளுக்கு முக்கியத்துவம் கொடுத்திருக்கிறதோ அதே போன்று தொழிலாளர் தினமாகிய மே விழாவைக் கொண்டாடுவதற்கு, மே தினத்தைக் கொண்டாடுவதற்கு, தொழிலாளர்களுக்கு முழு உரிமையும் அளிக்கப்பட்டிருக்க வேண்டும். ஆனால் மெஜாரிட்டி தொழிலாளர்கள் விரும்பினால் அந்நாளை விடுமுறை நாளாக ஏற்றுக் கொள்ளலாம் என்று இதில் சொல்லப்பட்டிருக்கிறது. அதற்கு, அனுமதி அளிக்கப்பட்டிருக்கிறது. இதன் மூலம் தொழிலாளர்கள் இடையே சண்டைகள் ஏற்படும் என்பதில் சந்தேகமில்லை. அதற்கு ஆதாரமாக எனக்கு முன்னால் பேசிய கனம் அங்கத்தினர் மாதா கௌடர் அவர்கள் பேசின பேச்சில் மே தினத்திற்கு விடுமுறை அவசியமில்லை என்ற கருத்தை வலியுறுத்தினார்கள். ஒரு சில கட்சிகளைச் சார்ந்த தொழிற்சங்கங்கள் மே தின விழாவைக் கொண்டாட வேண்டிய அவசியமில்லை என்று ஒரு முடிவு எடுத்தால் தொழிலாளர்களிடையே நல்லதொரு நாளை கொண்டாடுகிற நல்ல நேரத்தில் கட்சிப் பூசல்களுக்குத்தான் அது இடமளிக்கும் என்ற காரணத்தினால் எப்படி ஜனவரி 26-ந்தேதியும், ஆகஸ்டு 15-ந்தேதியும் கட்டாய விடுமுறை நாளாக ஆக்கப்பட்டிருக்கிறதோ அதேபோன்று மே தினத்தையும் கட்டாய விடுமுறை நாளாக ஆக்கவேண்டும். அதில் மெஜாரிட்டி அபிப்பிராயத்தைப்பார்த்து லீவ் விடவேண்டுமென்ற அவசியமில்லை. இந்தப் பாகுபாடு அவசியமில்லை. ஜனவரி 26-ம் தேதி ஆகஸ்டு 15-ம் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் மே தினத்திற்கும் உண்டு. அரசாங்கமும் இதை உணர்ந்திருக்கிறது என்று தான் நான் நினைக்கிறேன். ஏதோ காங்கிரசுக்கு எதிர்கட்சியாக இருக்கின்றவர்கள் இந்த மே தினத்தைச் சிறப்பாகக் கொண்டாடுகின்றார்கள், அவர்கள் நடத்துகின்ற விழாக்களில் தொழிலாளர்கள் அதிகமாக கலந்து கொள்கிறார்கள் என்ற காரணத்திற்காக மே தினத்தை சேர்க்காமல் விட்டிருப்பது அவ்வளவு சரியல்ல. அதல்லாமல் அந்தந்த தொழில் ஸ்தாபனங்களில் இருக்கிற தொழிலாளர்களின் மெஜாரிட்டி அபிப்பிராயத்தைப் பொறுத்து மே

10.30 a.m.

10.40 a.m.

தினத்திற்கு விடுமுறை கொடுக்க வேண்டும் என்பது அதிகப்படியான குழப்பத்தைத்தான் உண்டு பண்ணும் என்று நம்புகிறேன். மேலும் இதனுல் மனக்கசப்புத்தான் வளருவதற்கு இடமளிக்கும் என்றும் நம்புகிறேன். ஆகவே இதில் கட்சி வித்தியாசம் பாராமல் மே தினததை விடுமுறையாக ஆக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள் கிறேன். வணக்கம்.

**Sri P. S. CHINNADURAI :** மதிப்புற்குரிய உதவி சபா நாயகர் அவர்களே, சபை முன்பு பிரேரபணை செய்யப்பட்டிருக்கும் விடுமுறை நாட்கள் பற்றிய மசோதாவை நான் மனப்பூர்வமாக வரவேற்கிறேன். இந்த மசோதாவினுல், இதுவரை தேசீய நாட்களுக்கு விடுமுறை கொடுத்துவந்த போதிலும் அன்றைய தினத்திற்குச் சம்பளம் கொடுக்கப்படாமல் அல்லல் அளித்து வந்திருக்கும் தொழிலாளர்களுக்கு நிச்சியமாக நல்ல நிவாரணம் கிடைக்கும் என்பதில் சந்தேகமில்லே. விடுமுறை நாட்கள் 7 என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இந்த 7 விடுமுறை நாட்களில் இரண்டு தேசீய விடுமுறை நாட்களும் சேர்க்கப்பட்டிருக்கிறது. தேசீய விடுமுறை நாட்கள் சம்பந்தப்பட்டவரையில் இந்த நாட்டில் பிறந்து இந்த நாட்டில் வாழ்ந்து வருகின்ற எவருக்கும் இந்த தேசீய விடுமுறை நாட்களில் கருத்து வேற்றுமை இருக்க முடியாது என்பதைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இதற்கு வோட்டு எடுப்பு நடந்தால் இதற்கு விரோதமாகப் போய்விடும் என்று அஞ்சுவதற்கு அவசியமே கிடையாது. தொழிலாளர்களிடையில் வாக்கெடுப்பு நடந்தால் இதற்கு எதிரான அபிப்பிராயமே இருக்காது என்பதை இந்தச் சபை முன்பு எடுத்துச் சொல்ல ஆசைப்படுகிறேன். ஜனவரியீ 26-ம் ஆகஸ்டு 15-ம் காங்கிரஸ்காரர்களுக்கு மாத்திரம் உரியது என்று யாரும் நினைக்கக்கூடாது. இந்த நாட்டில் பிறந்த எல்லாக் கட்சிக்காரர்களுக்கும், எந்தக் கட்சியையும் சேராதவர்களுக்கும் உரிமையுள்ள தினம் என்பதை நான் எடுத்துக்கூற ஆசைப்படுகிறேன். அதேபோல் மே தினத்தை தொழிலாளர்களுக்குரிய தினமாகிய சட்டத்திலே சந்தேகத்திற்கு இடமின்றி எடுத்துச் சொல்லியிருக்க முடியும். அவ்வாறு செய்வார்கள் என்று எதிர்பார்க்கவும் செய்தோம். அத் தினத்திற்கு விடுமுறை அளிக்க வேண்டும் என்று நீண்டகாலமாக தொழிலாளர்களிடையில் கோரிக்கை இருந்து வருகிறது.

**(Mr. Speaker in the Chair.)**

மேதினத்தில் விடுமுறை கொடுக்க வேண்டும் என்று இந்த நாட்டில் தொழிலாளர்களின் ஸ்தாபனமாக இருக்கின்ற அகில இந்திய தொழிற் சங்கக் காங்கிரஸ், தேசீய தொழிற்சங்கக் காங்கிரஸ், ஐக்கிய தொழிற் சங்க காங்கிரஸ், இந்து மஸ்தூர் சபா போன்ற தொழிற்சங்க ஸ்தாபனங்கள் சொல்லி வருகிறது. அப்படிப்பட்ட நிலைமையில் மே தினத்தை ஒரு பண்டிகை தினமாகக் கொடுக்க வேண்டும் என்று ஐயத்திற்கு இடமில்லாமல் சட்டத்தில் சேர்த்திருப்பார்களானுல் நன்றாக இருந்திருக்கும் என்று கருதுகிறேன். அவ்விதமில்லாமல் மெஜாரிட்டியின் மூலம் தீர்மானிக்கப்பட்டால் மே தினத்தில் விடுமுறை கொடுக்கலாம் என்று சொல்லப்பட்டிருப்பது மேலும் சிக்கலை உண்டுபண்ணுவதற்குத் தான் இடமளிக்கும் என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன். உயர்ந்த நிலையில் இருக்கின்ற தொழிற்சங்கத் தலைவர்களே இம்மாதிரியான வோட்டு எடுப்பில் பல கருத்து வேறுபாடுடையவர்களாக இருக்கலாம். அதன் காரணமாக இதற்கு எதிராக வோட்டு செய்யக்கூடிய நிலைமை ஏற்படும். மேலும், ஒவ்வொரு ஆண்டிலும் தொழிலாளர்களின் மத்தியில் ஒரு பிளவும் மனஸ்தாபமும் ஏற்படுவதற்கு இது இடம் அளித்து விடக்கூடும் என்று நான் அஞ்சுகின்றேன். மே தினம், தொழிலாளர்களுடைய ஐக்கியத்தை வலியுறுத்துகின்ற தினம். தொழிலாளர்கள் ஒன்று சேர்ந்து கட்டுப்பாடாக இருக்க வேண்டும் என்று வலியுறுத்துகின்ற ஒரு தினம். ஆகவே இந்த தினத்திற்கு முக்கியத்துவம் அளித்து அதற்கு விடுமுறை அளிக்கவேண்டும் என்று அரசாங்கத்தினிடத்தில் பணிவன்புடன் வேண்டிக்

31st October 1958]    [Sri P. S. Chinnadurai]

கொள்கிறேன். இதில் விசேஷமாக சிக்கல் ஒன்றும் ஏற்படுவதற்கில்லை. ஆகவே அரசாங்கம் பெருந்தன்மையாக இதை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக விடுமுறை நாட்கள் சம்பந்தப்பட்டவரையில் இப்போது கொடுக்கப்பட்டிருக்கும் ஏழு நாட்கள் குறைவு என்று பலர் குறைப்பட்டுக்கொள்ளலாம். இப்போதும் பல நிறுவனங்களில் பல பண்டிகை நாட்களாக விடுமுறை கொடுக்கப்பட்டு வருகிறது இப்போது ஏழு நாட்கள் தானே கொடுக்கப்பட்டிருக்கிறது என்று சிலர் நினைக்கலாம். ஆனால் என்னைப் பொறுத்தவரையில் ஒன்றைக் குறிப்பிட விரும்புகிறேன்: இன்றைக்கு தொழிலாளர்கள் அதிகமாக விடுமுறை நாட்களை ஏன் விரும்புகிறார்கள் என்றால் அவர்களுக்குக் கொடுக்கப்படும் சம்பளம் போதாமல் இருப்பது தான். அவர்களுக்கு போதிய சம்பளம் கொடுக்கப்படுகிறது என்றால் அவர்கள் வேலையில்லாமல் சம்பளத்தைப் பெற்றுக்கொள்ளலாம் என்று நினைக்கமாட்டார்கள். இப்போது இருக்கின்ற நிலைமையில் ஏதோ பண்டிகை என்ன பெயரில் சம்பளத்தை பெற்றுக்கொள்ளலாம் என்றுள்ள நினைப்பத்தான் தொழிலாளர்களுக்கு இருந்து வருகிறது. அப்படிப் பார்க்கிறபொழுது இப்போது வைத்திருக்கிற ஏழு நாட்கள் விடுமுறை என்பது சரியானது தான் என்று நினைக்கிறேன். அதோடு அவர்களது ஊதியத்தை உயர்த்த வேண்டியதுதான் முக்கியமான அம்சம் என்பதையும் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இப்போது அரசாங்கத்தில் வேலை பார்க்கின்றவர்களுக்கு 23 அல்லது 24 நாட்கள் விடுமுறை கொடுக்கப்படுகிறது. அதோடு இந்த மசோதாவை ஒப்பிட்டுப்பார்க்கும்பொழுது அதிலிருந்து மூன்றில் ஒரு பங்கு நாட்கள்தான் மற்றத் தொழிலாளர்களுக்குக் கொடுக்கப்படுகிறது. அதைப்பற்றி நான் இப்போது சொல்லவிரும்பவில்லை. எப்படி இருந்தபோதிலும் அதிகமான பண்டிகை விடுமுறை நாட்களைப் பெறுவதினால் மட்டும் தொழிலாளர்கள் திருப்தி அடைந்து விட முடியாது. அதோடு அவர்களது வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதின் மூலமும், பஞ்சப்படியை உயர்த்துவதின் மூலமும் தான் அவர்கள் திருப்தி அடைய முடியும். அதைத்தான் அவர்கள் அரசாங்கத்தினிடமிருந்து எதிர்பார்க்கின்றார்கள் என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். மேலும் இதில் 30 தினங்கள் தொடர்ந்தாற்போல் வேலை செய்திருந்தால் தான் விடுமுறை கிடைக்கும் என்று கண்டிருக்கிறது. அதாவது "Immediately preceding such a holiday" என்பதற்குப் பதிலாக preceding such a holiday என்றிருந்தால் நன்றாக இருக்கும். இதில் 30 நாட்கள் சர்வீஸ் உடைய ஒவ்வொரு தொழிலாளிக்கும் இந்தப் பண்டிகை விடுமுறை கிடைக்கும் என்ற உறுதி இருக்கவேண்டும் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். மேலும் சர்க்கார் நிர்வாகத்தின் கீழ் இருக்கும் தொழில் நிறுவனங்களில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு இது பொருந்தாது என்று விதிவிலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. அவர்களுக்கு இது 10-50 a.m. பொருந்தாது என்றால் சர்க்கார் ஊழியர்களுக்குள்ளது போல 23 விடுமுறை நாட்கள் என்பது பொருந்துமா என்று அறிய விரும்புகிறேன். ஒருகால் அதனை மனதில் கொண்டு தான் இதனைப் பொருந்தாது என்று போட்டிருக்கிறார்கள் என்று நான் ஐயுறுகிறேன். இதேமாதிரி ஒரு சமயம் கொயில் அமைச்சர் கனம் வெங்கட்ராமன் அவர்களுடைய கவனத்திற்கு சிங்கோனா தோட்டத் தொழிலாளர்களுடைய சம்பளம் குறைவு என்றும், மற்றவர்களுக்கு அளிக்கப்படுகிற சலுகைகளும் அவர்களுக்கு அளிக்கவேண்டும் என்று கொண்டுவரப்பட்டபோது. அவர், இதோத் தொழிலாளர்களுக்கு இருக்கக்கூடிய சலுகைகள் வேண்டுமா அல்லது சர்க்கார் ஊழியர்களுக்கு இருக்கக்கூடிய சலுகைகள் வேண்டுமா. இந்த இரண்டிலே எது வேண்டும் என்று அவர்கள் தீர்மானிக்கவேண்டும் எனச் சொன்னார். அதை இப்போது நினைக்கும் போது தான் உண்மையிலேயே எனக்கு இந்தச் சந்தேகம் ஏற்படுகிறது. இதிலே இப்போது விதி விலக்கு அளிக்கப்பட்டிருப்பதிலிருந்து. அந்த நிறுவனத் தொழிலாளர்கள் சர்க்கார் ஊழியர்களுக்குரிய விடுமுறை நாட்களை அனுபவிக்கப் போகிறார்களா அல்லது அனுபவித்து வருகிறார்களா என்று தெரியவில்லை. இதைப்

பற்றி அமைச்சர் அவர்கள் விளக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அனுபவித்து வருகிறார்கள் என்றால் இப்போது இந்த மசோதாவிலே விதி விலக்கு அளித்திருப்பது சரிதான். அந்தச் சலுகை இல்லாமலிருந்தால் நிச்சயமாக இந்த விதி விலக்கு தேவையற்றது என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். எப்படியும் இந்த மசோதா நன்மை அளிக்கத் தக்க மசோதா. இதனை நான் வரவேற்கிறேன்.

*SRI R. SRINIVASA IYER : ஸார், இந்த மசோதாவிலே விடுமுறை நாட்களைப் பற்றி மட்டும் விவாதிக்கப் படவேண்டுமென்று குறிப்பிடப்பட்டிருப்பதால் இதைப் பற்றி அதிகமாக விவாதிக்க வேண்டியதில்லையென்றாலும் என்னுடைய அபிப்பிராயத்தைக் கூற விரும்புகிறேன்.

வேலை கொடுக்கிறவர்களுக்கும், வேலை செய்கிறவர்களுக்கும், Employers Employees இடையே உள்ள பாந்தவ்யத்தில் எவ்வளவு தூரம் நிர்ப்பந்தமாகப் பிரவேசிக்கலாம் என்று கொஞ்சம் சிந்தித்துப் பார்க்க வேண்டும் என்று சொல்ல விரும்புகிறேன். காபிடலிஸ்ட்டுகளுக்கும் லேபருக்கும் உள்ள உறவில் பல விதங்களில் பிரவேசிக்க விட்டோம். அந்த வகையிலே தான் ஷாப் ஆக்ட், கேடரிங் எஸ்டாப்ளிஷ்மெண்ட்ஸ் ஆக்ட், சமீபத்தில் நிறைவேற்றப்பட்ட பீடி இண்டஸ்ட்ரீஸ் ஆக்ட் முதலிய சட்டங்களை எல்லாம் நிறைவேற்றியிருக்கிறோம். இப்போது நிர்ப்பந்தமாக லீவு கொடுக்கவேண்டுமென்று ஒரு சட்டம் ஏற்படுத்தப்போகிறோம். அமைச்சர் அவர்கள் சொன்ன மாதிரி இப்போதே அநேக தொழிற் சாலைகளில் இதைப் பார்க்கிலும் அதிகப்படியான லீவு கொடுத்து வருகிறார்கள். மனமொப்பி வேலை கொடுக்கிறவர்களும், வேலை செய்கிறவர்களும், இருவரும் சம்மதப்பட்டு லீவு கொடுக்கப்படுகிறது அந்த லீவு நாட்களுக்குச் சம்பளமும் கொடுக்கப்பட்டு வருகிறது. மத்திய சர்க்கார் நிறுவின கமிட்டியிலும், பம்பாயில் நடந்த கமிட்டியிலும், நம் ராஜ்யத்தில் நடந்த கமிட்டியிலும் கூட அதிகப்படியான லீவு கொடுக்க முதலாளிகள் ஆட்சேபிக்கிறார்கள் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். கனம் லாஸர் அவர்கள் சொன்ன மாதிரி இது எல்லாத் தொழில்களுக்கும் பொருந்துமானதால், சிறு சிறு ஷாப்புகளுக்கும் பொருந்துமானதால் இதனால் லட்சக்கணக்கான தொழில்கள் பாதிக்கப்படும். கெடுதலாக பாதிக்கப்படும் என்று சொல்லவில்லை. இதிலேயுள்ள இரண்டொரு செக்ஷன்களைப்பற்றிக் குறிப்பிட விரும்புகிறேன். இப்போது 7 நாட்களுக்கு விடுமுறை கொடுக்கிறோம். அதற்கென பிரத்யேக ரிஜிஸ்டர் வைத்துக்கொள்ளவேண்டும். ரிஜிஸ்டரை சரியாக வைத்துக்கொள்கிறார்களா என்று இன்ஸ்பெக்டர் அபிப்பிராயப்படுகிற போதெல்லாம், "அட் ஆல் ரீஸனபிள் டைம்ஸ்", உள்ளே புகுந்து பரிசோதித்துப் பார்க்கலாம். அது சரியாக வைக்கப்பட்டு வருகிறதா என்று அவர் பரிசீலிக்கலாம். இதை அமல் நடத்த 8, 9 செக்ஷன்களில் பெனால்டி ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. 25 ரூபாய் அபராதம் போடலாம் என்று போடப்பட்டிருக்கிறது. இரண்டாவதும், அதற்குப் பிந்தின குற்றங்களுக்கும் 250 ரூபாய் வரை அபராதம் போடலாம். 9-வது செக்ஷனிலே, அப்ஸ்ட்ரக்ஷன் செய்தால், அதாவது இன்ஸ்பெக்டர் போய் பரிசீலிப்பதைத் தடுத்தால், இம்ப்ரிஸன்மெண்ட், அதாவது ஜெயில் தண்டனை கூடக் கொடுக்கலாம் என்றிருக்கிறது. இதைப் பொருத்த அளவிலும் இன்னும் மற்ற இதரச் சட்டங்களில் இருக்கக்கூடிய இதே வித சில நிர்ப்பந்தங்களைப் பார்க்கும்போதும் ஹாராஸ்மெண்ட் ஏற்படும் என்று சொல்லப்படுகிறது. அதே மாதிரி இதுவும் இடம் கொடுக்காதா என்று பார்க்க வேண்டும். சிறு தொழில்கள் ஆரம்பிக்கிறவர்களுக்கும், பெரிய தொழில்கள் இதர பிராந்தியத்தைப் போல தனியார் துறையில் கோடிக்கணக்கான முதலீடு செய்கிறவர்களுக்கும், அடிப்படை எம்ப்ளாயர்-எம்ப்ளாயீ பாந்தவ்யத்தில் பிரவேசித்து நிர்ப்பந்தம் ஏற்படுத்தினால், இந்த நிர்ப்பந்தங்களுக்குப் பயந்து புதிய தொழில்கள் ஆரம்பிக்கப்படாமல் போகும். அதோடு ஆரம்பித்து நடத்தப்படும் தொழில்களும் நிறுத்தப்படக்கூடிய நிலைமை ஏற்படும் என்பதை யோசித்துப் பார்க்கவேண்டும். விடுமுறை கொடுப்பதால் உற்பத்தி பாதிக்கப்படும் என்று குறிப்பிட நான் விரும்பவில்லை. இதே

31st October 1958] [Sri R. Srinivasa Iyer]

மாதிரி நாம் போனால் எந்த அளவிலே போய் நிற்கப் போகிறோம் என்பது சந்தேகமாக இருக்கிறது. ஏற்கனவேயே தனியார் துறையில் நடத்தப்பட்டு வருகிற சில பெரிய தொழிற்சாலைகளில், வேலை செய்கிறவர்களின் சில நடவடிக்கைகள் காரணமாக என்று சொல்லப்படுகிறது, நஷ்டம் ஏற்பட்டு அதனால் மில்கள் நிறுத்தப்படுகிறது என்றும் நஷ்டப்பட்டாலும் கூட சர்க்கார் அதை எடுத்து நடத்தவேண்டுமென்று வற்புறுத்தப்படுகிறது. சர்க்கார் எடுத்து நடத்தி நஷ்டம் ஏற்பட்டால், அந்த நஷ்டத்தை எந்தப் பணத்திலிருந்து ஈடு செய்வது ? சாதாரண ரயத்துக்கள் கொடுக்கக்கூடிய ரெவின்யூவிலிருந்தும் அந்த நஷ்டம் ஈடு செய்யப்படும். இந்த மாதிரி போனால், தொழிலாளர்களுக்கும், தொழில் கொடுப்பவர்களுக்கும் இடையே உள்ள சுமுகமான உறவை அரசியல் கட்சிகள் ஏற்படுத்தினால் தொழில் முறை சரியாக நடக்காது என்று வற்புறுத்திப் பல முறை சொல்ல விரும்புகிறேன். லீவ் கொடுக்கவேண்டாம் என்று, லீவ் கொடுப்பதைப்பற்றிச் சொல்லுகிறேன் என்று யாரும் எண்ணிவிடக்கூடாது.

அதே நேரத்தில் சொல்லிக்கொள்ளாமல், உத்திரவு பெறாமல், அனுமதி பெறாமல், அப்ஸெண்டாக இருந்தால் அதைப்பற்றி என்ன விதியிருக்கிறது ? சரியாக வேலை செய்யாவிட்டால் அதைப்பற்றி நடவடிக்கை எடுக்க என்ன விதி இருக்கிறது. நீக்கினால்தான் அதற்கு மேல் அப்பீல், ரிட் பெடிஷன் என்றெல்லாம் இருக்கிறது. ஊதியம் ஜாஸ்தியாக வேண்டும். லீவு ஜாஸ்தியாக வேண்டும் என்று கேட்கிறார்கள். அதே நோக்கில் efficiency of service, efficiency of work, quantity of work turned out இதற்கெல்லாம் யார் உத்திரவாதம் ? அதற்கு யாரும் உத்திரவாதம் இல்லை. சுமுகமான காண்ட்ராக்ட் பேஸிஸில், நல்ல முறையில் இருவரும் சேர்ந்து நடந்தால்தான் efficiency ஏற்படும் என்று நான் வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன். அதே நோக்கில் கனம் சின்னதுரை அவர்கள் சொன்னது போல சம்பளத்தோடு லீவ் கிடைத்தால் யாராக இருந்தாலும் சந்தோஷம் தான். லீவ் விட்ட பிறகு, லீவுக்கு மறுநாள் வந்து அதற்கு ஈடாக நல்ல முறையில் உற்பத்தியை அதிகரிப்பார்களா என்றால், அதுதான் குறைவு. இதற்கு நான் யாரையும் குற்றம் சொல்ல விரும்பவில்லை. ஆனால் போகப் போக காபிடலிஸ்ட் லேபர் பாந்தவ்யத்தை நிர்பந்தமான முறையில் ஏற்படுத்துவது நல்லதா என்பதைச் சற்று சிந்தித்து முடிவு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இந்தச் சட்டத்தை நான் வரவேற்கிறேன். ஏனென்றால், 7 நாட்கள் வரை தான் லீவு கொடுக்கப்படப் போகிறது இந்த மசோதாவின் பிரகாரம். அதுவும் தேசீய விடுமுறை நாட்களுக்கும். பண்டிகை நாட்களுக்கும்தான். அதுவும் நம் தமிழ் நாட்டில் முக்கியமான பண்டிகை நாட்கள்.பொங்கல், தீபாவளி போன்ற பண்டிகை நாட்கள் இப்போதே இந்த நாட்களுக்கு விடுமுறை அளிக்கப்படுகிறது என்று நினைக்கிறேன். தீபாவளிக்கு அவ்வளவு கடைகளையும் சாத்திவிடுகிறார்கள். அப்படித் தீபாவளிக்குத் திறந்திருந்தாலும் மறுநாள் மூடிவிடுகிறார்கள். உத்தியோகம் கொடுக்கிறவர்களுக்கும், உத்தியோகம் செய்கிறவர்களுக்கும் இடையேயுள்ள பாந்தவ்யத்தில் நிர்ப்பந்தத்தை ஏற்படுத்த வேண்டாமென்று எல்லாக் கட்சிகளையும் கேட்டுக் கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

MR. SPEAKER : Mr. V. K. Ramaswami Mudaliar (Sri M. Kalyanasundaram rose). How am I to know that the hon. Member desires to speak unless he tells me in advance? If hon. Members want to speak, it is better that they inform the Speaker. Members should not expect me to call every Member and ascertain whether he is anxious to speak. 11 a.m.

SRI M. KALYANASUNDARAM : I told the Deputy Speaker.

MR. SPEAKER : I am sorry. He gave me the name of the Leader of the Opposition only. Anyway, let him speak.

11-00 a.m. **SRI M. KALYANASUNDARAM:** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவில் கொஞ்சம் விடுமுறை நாட்கள் குறைவாக இருக்கிறது என்ற கருத்தும் இருக்கும். இது அதிகமாகக்கூட இருக்கிறது என்ற கருத்தும் இருக்கும். ஆனால் விடுமுறை என்றால் என்ன என்பதை அறியாத தொழிலாளர்களுக்கு, வருஷத்திற்கு 7 நாட்கள் விடுமுறை உண்டு என்ற நிலைமையை ஏற்படுத்துகின்ற இந்த மசோதாவை நான் வரவேற்கிறேன். இது கூட முதலாளிகளுக்குக் கஷ்டமாகத்தான் இருக்கும். அவர்களுக்காக நாம் பரிந்து பேச வேண்டிய அவசியம் இல்லை என்பது என் அபிப்பிராயம். தொழிலாளர்களுக்குப் பரிந்து பேசினாலே, உற்பத்திப் பெருக்கத்திற்கு அபத்து வந்துவிட்டது என்று கூறுவதை நாம் எடுத்துக்கொள்ளத் தேவையில்லை என்பது என் அபிப்பிராயம். ஆனால் தொழிலாளர்களுடைய பிரச்னையைப் பற்றி எப்படி எடுத்துச் சொல்வது என்பதுகூட புரியாமல் சொல்லலாம். 52 தினங்கள் வருஷத்திலே வாரா விடுமுறைகள். அதற்குமேல் 9 நாள், இன்னும் 69 நாட்களுக்கு மேல் விடுமுறை என்பது பெரும்பாலான தொழிற்சாலைகளில் கிடையாது. 7 தினங்கள் கொடுத்து விட்ட பிறகும் கூட வேலை காலத்திலே அதிக உற்சாகத்தில் வேலையில் ஈடுபடுவார்கள். தொழிலாளர்களுக்கு லீவு கொடுத்தால் உற்பத்தி பெருகுமே தவிர குறையாது. அவர்களை நிர்ப்பந்தம் செய்யக்கூடாது. அதுதான் உற்பத்திக்கு மிகவும் அவசியமென்று எடுத்துக்காட்ட விரும்புகிறேன். ஆனால் அந்த விடுமுறைகளைக் குறைப்பதனால் மட்டும் உற்பத்தியைப் பெருக்குவது முடியாது. உற்பத்திக்கு ஆபத்து ஏற்பட்டுவிடுமென்ற முதலாளிகளுடைய பேச்சைக் கேட்டுக்கொண்டு நாம் ஏமாந்து போகவேண்டாமென்று எடுத்துக்காட்ட விரும்புகிறேன். விடுமுறை கொடுப்பதால் தொழிலாளர்கள் வேலை செய்யக் கூடிய நோக்கில், வேலை தினங்களில் மேலும் அதிகமான உற்சாகத்தோடு வேலையில் ஈடுபடமுடியும்.

இந்த மசோதா மீது வழக்கு சம்பந்தமாக விவாதிக்க வேண்டிய அவசியம் இல்லை. அதற்கு வேறு மசோதாக்கள் இருக்கின்றன. நண்பர் ஸ்ரீனிவாச ஐயருக்குத் தெரியாமல் இருக்கலாம். தொழிலாளர்கள் தங்கள் இஷ்டப்படி நடந்துகொள்ள முடியாது. அதற்காக "கோடு ஆப் டிஸிப்ளின் இருக்கிறது". முதலாளிகளுக்கும் இருக்கிறது. தெரியாமல் இருந்தாலும் ஸ்ரீனிவாசய்யர் தெரிந்துகொண்டு பேசியிருக்கலாம். முதலாளிகளுடைய பேச்சைக் கேட்டுக்கொண்டு தொழிலாளர்கள் வழக்கு முறை தவறி நடந்துகொள்கிறார்கள் என்ற முறையில் பேசி இருக்கவேண்டாமென்று தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்தச் சட்டம் நிறைவேற்றப்பட்டாலும் கூட இன்னும் 7 தினங்கள்தான் விடுமுறை அதிகமாகக் கிடைக்க இருக்கிறது. இதில் சில குறைபாடுகளும் இருக்கின்றன. அதைப்பற்றி மட்டும் நான் சர்க்காருடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். ஒன்று, சம்பளம் என்று வியாக்கியானம் செய்து கொண்டிருக்கிற சமயத்தில் போனஸைச் சேர்க்கக் கூடாது. சில தொழிலாளர்களுக்கு உற்பத்தி போனஸ் இருக்கிறது. அட்டெண்டன்ஸ் போனஸும் இருக்கிறது. 26 தினங்கள் வேலை செய்தால், கூட 4 ரூபாய் சேர்த்துக் கொடுக்கக்கூடிய வகையில் இருக்கிறது. அப்பேர்ப்பட்ட போனஸை விலக்கு விட்டு விடுவார்கள் என்ற காரணத்தினால்தான் போனஸை லாபத்தின் மீது கொடுக்கப்படுகின்ற போனஸ் என்று சேர்க்கக் கொள்ளவேண்டும். அப்படி மாதாமாதம் கொடுக்கக்கூடிய உற்பத்திப் போனஸ், அட்டெண்டன்ஸ் போனஸ் சம்பளமாகக் கருதப்படவேண்டும் என்பது என்னுடைய அபிப்பிராயம்.

இன்னும் விடுமுறை தினத்துக்கு சம்பளத்தை நிர்ணயிப்பதில் குறைபாடு இருக்கிறது. செக்ஷன் ஐந்தில் அதற்கு முந்திய ஒரு மாசம் சம்பாதித்து இருக்கக்கூடிய ஊதியத்தை சராசரியாகக் கணக்கெடுத்துக் கொள்ளவேண்டுமென்று இருக்கிறது. தொழிலாளர்களுடைய விருப்பத்திற்கு மாறாக முதலாளிகளுடைய நிர்ப்பந்தத்தினால் சில நிலைமைகள் ஏற்படுகின்றன. அதாவது மின்சார வெட்டு மூலமாக அல்லது வேறு

காரணத்தினால் வேலை தடைப்பட்டாலும் அவர்களுடைய சம்பளம் குறைந்து விடும். ஆகையால் தொழிலாளர்கள் தாங்களாக வேலைக்கு வராமல் "ஆப்செண்ட்" ஆகி இருந்திருந்தால் அதற்கு ஊக்கம் அளிக்கச் சொல்லவில்லை. வேறு காரணங்களால் தொழிலாளர்களுடைய வருமானம் குறையுமானால் அந்தக் குறைவான வருமானத்தின் மீது சராசரி எடுத்து விடுமுறை நாட்களுக்குக் கூலியை நிர்ணயிப்பது அநீதியாகும். ஆகையால் தான் நான் கொடுத்துள்ள திருத்தங்களில் அந்தப் பிரிவு ஆலோசனைக்கு வரும்பொழுது நான் விவரமாகப் பேசலாம் என்று நினைக்கிறேன். அந்தத் திருத்தங்களை ஏற்றுக்கொண்டு இந்தச் சட்டத்தை எல்லோரும் ஒருமுகமாக நிறைவேற்றி வைக்கவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

*Sri V. K. RAMASWAMY MUDALIYAR: கனம் சபாநாயகர் அவர்களே, பொதுவாக நான் இந்தச் சட்டத்தை மனப்பூர்வமாக ஆதரிக்கிறேன். மேல் நாடுகளில் "இண்டர்நேஷனல் கோடு" பிரகாரம் இவ்வளவு விடுமுறை நாட்கள் இல்லாதிருந்தபோதிலும் நம் தேசத்தில் அதிகமான நாட்களை இந்த மசோதாவின் மூலமாக கொடுத்திருப்பதற்கு நான் ரொம்பவும் பாராட்டுகிறேன். முக்கியமாக நிர்வாகத்தினருக்கும் தொழிலாளர்களுக்கும் இடையே ஒரு பரஸ்பரமான நிலை ஏற்படும். இரண்டு பேரும் நன்ருக ஒத்துழைத்தால்தான் நமக்கு வேண்டிய அந்நியச் செலாவணி கிடைக்கும். தேசத்தில் உற்பத்தி பெருகும். இதை யாரும் மறுக்க முடியாது. அதற்காக இரண்டு பேரும் நன்ருக ஒத்துழைத்து கஷ்டப்பட்டு உழைக்கவேண்டும்.

இந்த அடிப்படைகளைக் கொண்டு விடுமுறை நாட்களைப் பற்றித் தொழிலாளர்களுடைய கோரிக்கைகள் இருந்துவந்த போதிலும் சர்க்கார் இந்தச் சமயத்திலாவது இந்த மசோதாவைக் கொண்டு வந்ததைப் பற்றி நான் சந்தோஷப்படுகிறேன். முக்கியமாக உணவு உற்பத்திக்குத் தொழிலாளர்கள் நன்ருகப் பாடுபடவேண்டும். அவர்களுடைய மனப்பான்மையைக் கொஞ்சம் மாற்றிக்கொண்டு நன்ருக உழைப்பதற்கு முன்வரவேண்டுமென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அதே முறையில் மானேஜ்மெண்டாரும் நல்ல முறையில் தொழிலாளர்களை நடத்தி அவர்களுக்கு வேண்டிய உதவிகளைப் புரிந்து வரவேண்டும். இதில் 10-வது செக்ஷன் முக்கியமானதாகும்.

ரிசர்வ் பாங்குக்கு மட்டும் இதிலிருந்து சில விதி விலக்குகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஆனல் அதைச் சார்ந்த மற்ற பாங்குகளுக்கு எல்லாம் இந்தப் 10-வது விதிப்படி விதிவிலக்கு கொடுக்காத காரணம் என்னவென்று தெரியவில்லை. அதை அமைச்சர் அவர்கள் அவருடைய பதில் உரையில் சொல்வார்கள் என்று நான் நம்புகிறேன். மற்ற பாங்குகளுக்கும் விதி விலக்கு கொடுக்கப்படாததைப்பற்றி சர்க்கார் நன்ருக யோசித்து அவைகளுக்கும் விதிவிலக்கு அளிக்கவேண்டும். இந்த மசோதாவை நன்ருகப் பரிசீலித்து நல்ல முறையில் அமுலுக்குக் கொண்டு வருவார்கள் என்று நம்புகிறேன். பொதுவாக நான் இந்த மசோதாவை ஆதரிக்கின்றேன் என்று கூறி முடித்துக் கொள்கிறேன்.

The Hon. Sri M. BHAKTAVATSALAM: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவின் அடிப்படை தொழிலாளர்களுக்கு ஓரளவு விடுமுறை கொடுக்கவேண்டுமென்பதுதான். விடுமுறை என்ருலே அர்த்தம் அந்த விடுமுறை நாட்களில் அவர்கள் வேலைக்குச் செல்லவில்லை என்ருலும் அவர்களுக்குச் சம்பளம் உண்டு என்பதுதான். ஓரளவாகிலும் இந்தக் குறிப்பிட்ட அளவுக்கு ஏழு நாட்களாகிலும் விடுமுறை கொடுக்கவேண்டுமென்பதுதான் இந்த மசோதாவின் அடிப்படை. பொதுவாகத் தொழிலாளர்களும், தொழில் அதிபர்களும் பரஸ்பரம் அவர்களுக்கிடையே இருக்கவேண்டிய நல்லுறவு முதலியனவெல்லாம் பொதுவான பிரச்சினை. அந்தப் பிரச்னையைபற்றி அப்பேதைக்கப்போது கவனம் செலுத்தப்பட்டு வருகிறது, சட்டங்கள் செய்கின்ரேம். மற்ற ஏற்பாடுகளைச் செய்கின்ரேம். அவைகளை இதிலே கொண்டுவரவேண்டிய அவசியம் இல்லை.

[Sri M. Bhaktavatsalam] [31st October 1958

ஓரளவு விடுமுறை, வேலை செய்கின்ற தொழிலாளர்களுக்கு வேண்டியது அவசியம் என்பதை எல்லோரும் ஒப்புககொள்வார்கள். எனககே ஆச்சரியமாக இருந்தது. நாம் பொதுவாக அரசாங்கக் காரியங்களைப்பறறி ஒரு குறைபாடு சொல்வதுண்டு. நம் நாட்டில்தான் அரசாங்கக் காரியாலயங்களுககு அதிகமான விடுமுறை விடப்படுகிறது என்று. மற்ற நாடுகளில் அவ்வளவு நாட்கள் விடுமுறை இல்லை என்று சொல்வதுண்டு. 23 நாடுகள் என்று
11-10 a.m. சொன்னார்கள். அந்தமாதிரியாக அதிகமான விடுமுறை கொடுப்பதுபற்றி பேசப்பட்டது. ஏறக்குறைய மற்றவர்களைப் போலவே தொழிலாளர்களும் அதிகமான விடுமுறையை அநுபவித்து வருவதாகத்தான நான் தப்பாக எண்ணிக்கொண்டிருநதேன். அப்புறம் அதைப்பறறி விசாரித்தபோது இந்த 7 நாட்கள் கூட அவர்கள் விடுமுறை அநுபவிக்கவில்லை என்று தெரிந்தபோது ஆச்சரியமாக இருந்தது. அவசியம் ஒரு சட்டம் செய்தாக வேண்டும் என்ற நிலைமையை உணர்ந்தேன். சில அலுவலங்களில் அப்போதே பழக்கவழக்கங்களினால் அதிகமான விடுமுறை கொடுத்து வந்தார்கள். பி. அண்டு ஸி. மில்லில் 11 நாட்கள் உண்டு. இன்னும் சில கம்பெனிகளில் இதையும் விட தாராளமாக லீவு வழங்கி வந்திருக்கிறார்கள். ஆகவேதான் இபபோது 7 நாடகள் என்று சட்டம் கொணடு வருமபோது இந்த ஏற்பாடு முனபு இருந்த பழக்கவழக்கத்தை பாதிக்கக் கூடாது என்று சொல்லியிருக்கிறோம. ஏழு நாட்கள் கூட லீவு இல்லாமல் இருந்த இடங்களில் இபபோது இந்த 7 நாட்களாவது கொடுக்க வேண்டுமெனறு செய்திருக்கிறோம். இரண்டு தினங்கள் தேசீய நாட்கள். இந்த மாதிரி மசோதா இல்லாத காரணத்தினால்தான் அப்போது ஒவ்வொரு ஆண்டும் ஆகஸ்டு 15 தேதிக்கு லீவு விடவேண்டும், ஜனவரி 26-க்கு லீவு விடவேண்டும் என்று தனித்தனியாக உத்தரவு போட்டுக்கொண்டு வந்திருக்கிறோம். இந்த மசோதா அந்தக் கஷ்டத்தை நிவர்த்தி செய்து விட்டது. சுதந்திர தினம், குடியரசு தினம் இரண்டுககும் லீவு, மற்றும் ஐந்து பண்டிகைகளுககு லீவு என்று குறைநதபட்சமாக வகை செய்கிறது இந்த மசோதா.

திரு. சின்னதுரை சொன்னதை நான் முற்றிலும் ஒப்புக்கொள்கிறேன. சுதந்திர தினத்தன்றும், குடியரசு தினத்தன்றும் விடுமுறை அளிப்பதற்கு யாரும் ஆட்சேபிப்பார்கள என்று அரசாங்கம் கருதவில்லை. தேசீய தினங்களாக அந்த இரண்டு தினத்தையும் கருதுவதில இந்தியர்களிடையே ஆட்சேபம் இருககும் எனற ஐயம் கிடையாது. அதறகாக இந்த மசோதாவில் அந்த இரண்டு தினத்தையும் நாங்கள் சேர்த்துவிடவில்லை. கனம் கோவிந்தசாமி அப்படி ஒரு காரணத்தைக் குறிப்பிட்டார். அது சரியல்ல. அப்படிச் சொல்வது இந்த நாட்டின் கௌரவத்திற்கே குறைவு.

SRI A. GOVINDASAMY : அப்படி நான் குறிப்பிடவில்லை. குடியரசு தினம், சுதந்திர தினம் இரண்டுக்கும் எவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருக்கிறதோ அப்படி மே தினத்திற்கும் கொடுக்கக் கூடாதா என்றுதான் சொன்னேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சுதந்திர தினம், குடியரசு தினம் ஆகிய இரண்டையும் தேசீய தினங்களாகக் கருதுவதில் அபிப்பிராய பேதம் இருந்தாலும் உள்ளுக்குள் வைத்துக்கொள்வார்களே தவிர வெளிப்படையாகச சொல்ல முடியாது.

தேசீய நாட்கள் இரண்டுக்கு விடுமுறை என்று சொல்லியிருப்பதை போல ஏன் மற்றொரு நாளைக்குச் சொல்லக் கூடாது ? மே தினததையும் அப்படிச் சேர்த்திருககலாமே என்று சொன்னார்கள். மே மாதம் முதல் தேதியைத் தொழிலாளர் நாளாகக் கொண்டாடுகிறார்கள். அரசாங்கம் அதை உணராமல் இல்லை. ஆனால் ஒரு நாளை நாம் நம்முடைய நாளாகக் கொண்டாடுவதற்கு விடுமுறை வேண்டுமென்பது இல்லை. மே தினம் போல லீவு விடவேண்டுமென்றால் இன்னும் அநேக நாட்கள் சொல்லலாம். இது தமிழர்களுடைய நாடு. சித்திரை முதல் தேதி லீவு விட்டால் நல்லது என்பர். இனனொரு நாள். தமிழ் நாட்டில் ஆயுத பூசை

31st October 1958] [Sri M. Bhaktavatsalam]

சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. அன்றைக்கு எல்லாத் தொழிலாளர்களும் ஆயுதங்களை வைத்துக் கும்பிடுகிறார்கள். அன்றைக்கு லீவு விடவேண்டுமென்று சொல்லலாம். இப்போதுள்ள ஏற்பாட்டின்படி அன்றைக்கு லீவு வேண்டுமென்றால் பண்டிகை நாளாக எடுத்துக்கொள்ளலாம். இல்லாவிட்டால் வேலை செய்துகொள்ளமுடியும். மற்றொரு நாள். பொங்கல் தினம். தமிழர் திருநாள் என்று அன்றைக்கும் நம் நாட்டில் இப்போது மிகவும் சிறப்பாகக் கொண்டாடி வருகிறார்கள். ஆகவே இரண்டு தேசீய நாட்களுக்கு லீவு விட்டுவிட்டு மே தினமாக இருந்தாலும், தமிழ் வருஷப் பிறப்பு, ஆயுத பூஜை, பொங்கல் என்று என்றைக்கு வேண்டுமோ அன்றைக்கு வருஷத்தில் ஐந்து பண்டிகை தினங்கள் விடுமுறை அளிக்கவேண்டுமென்று குறிப்பிட்டிருக்கிறோம்.

தொழிலாளர்களுடைய தலைவர்கள் என்னிடம் வருத்தப்பட்டுக் கொள்ளக்கூடாது. நான் தவறுதலாகச் சொல்லவில்லை. மே தினத்தை நம்முடைய தேசீய தினங்களோடு நான் ஒப்பிடுவதற்கில்லை. இரண்டையும் சமமாக நான் வைப்பதற்குத் தயாராக இல்லை. அப்படி வைப்பதானது நம்முடைய சுதந்திர தினத்திற்குள்ள முக்கியத்துவத்தை, குடியரசு தினத்திற்குள்ள முக்கியத்துவத்தைக் குறைத்ததாகத்தான் ஆகும். ஆகையால் தான் பண்டிகை தினங்களோடு மே தினம் சேர்க்கப்பட்டிருக்கிறது.

மற்றொன்று சர்க்காருடைய தொழிற்சாலைகளைப் பற்றியது. அவர்களுக்கு ஏன் விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது என்று கேட்டார்கள். ஏற்கெனவே அவர்களுக்குத் தனியாக விதிகள் இருக்கும்; சலுகைகள் இருக்கும். கனம் அங்கத்தினர் சின்னதுரை சொன்னார்கள். சிங்கோனா தொழிற்சாலை போன்ற ஸ்தாபனங்களில் இப்போது சரியான முறையில் விடுமுறை அளிக்கப்படவில்லை என்பதாக. அதைப்பற்றிய விவரங்கள் என்னிடத்தில் இல்லை. இருந்தாலும் நாங்கள் கவனித்துக்கொண்டுதான் வருகிறோம். பொதுவாக எல்லாத் தொழிலாளர்களுக்கும் ஒரேவிதமான வசதி, சலுகை எல்லாம் இருக்கவேண்டுமென்பதுதான சர்க்காருடைய கொள்கை.

அநேக கார்ப்பரேஷன்கள் இருக்கின்றன. அவைகளுக்கு ஏற்கனவே பல வசதி, சலுகை எல்லாம் இருக்கிறது. அவற்றையெல்லாம் பரிசீலிக்காமல் இந்தச் சட்டமும் அவர்களுக்குப் பொருந்தும் என்று சேர்த்துவிட முடியாது. இது சிக்கலை விளைவிக்கும்.

சில பெரிய பெரிய திட்டங்களைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். பெரிய பெரிய திட்டங்களில் நாம் எல்லோரும் அக்கறை கொண்டிருக்கிறோம். அந்தத் திட்டங்கள் துரிதமாக நிறைவேற்றப்பட்டாக வேண்டும். அதையும் கவனிக்கவேண்டும்.

இன்னும் 30 நாட்கள் தொடர்ந்தாற்போல வேலை செய்தால்தான் இந்தச் சலுகை உண்டென்று குறிப்பிடப்படுவது கூடாது என்று சொன்னார்கள். பொறுக்குக் கமிட்டியில் இவையெல்லாம் நன்றாகத்தான் பரிசீலனை செய்யப்பட்டது. போனஸ் விஷயத்தைப்பற்றிச் சொன்னார்கள். போனசு கூடாது என்று அர்த்தம் இல்லை. அதை மாற்றுவது சரியல்ல. பின்னால் அது சிக்கல்களைக் கொடுக்கும். திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் பேசும்போது ஒரு வாரச் சம்பளம் சராசரி பார்த்து லீவு நாள் சம்பளமாகக் கொடுக்கப்படும் என்று இருப்பதைப்பற்றிச் சொன்னார்கள். அதற்கு ஒரு திருத்தம் கொடுத்திருக்கிறார்கள். அதைக்கூட நான் ஏற்றுக்கொள்ளலாம் என்று இருக்கிறேன். அப்போது அதைப்பற்றி அபிப்பிராயம் தெரிவிக்கிறேன். பொதுவாக தொழிலாளர்களுடைய சலுகை அவர்களுக்கு ஊக்கம் அளிப்பதாக அமைய வேண்டும். தொழிலதிபர்களின் ஒத்துழைப்பையும் பெற்றதாக அமையவேண்டும். அப்போதுதான் இருதரப்பாரும் உற்சாகமாக வேலை செய்து உற்பத்தியைப் பெருக்குவதற்கு வாய்ப்பு உண்டாகும். நாட்டின் செல்வம் பெருகும். ஆகவே இந்த மசோதாவை ஆதரித்துப் பேசியவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொண்டு இந்த மசோதாவை ஏகமனதாக ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : Motion moved—

"That the Madras Industrial Establishments (National and Festival Holidays) Bill, 1958 (L.A. Bill No. 19 of 1958) as amended by the Select Committee, be taken into consideration".

The motion was put and carried and the Bill was taken into consideration.

*Clause 2.*

MR. SPEAKER : The motion is—

"That clause 2 do stand part of the Bill."

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—

"In sub-clause (*b*) (i) in line 9 *after* the word 'reward' *add* the words 'badli temporary or by any other name'."

The amendment was duly seconded.

SRI M. KALYANASUNDARAM : Sir, I move—

"In sub-clause (*g*) (ii) (*a*), *after* the words 'any bonus' *add* the words 'based on profit'."

The amendment was duly seconded.

MR. SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

*SRI V. K. KOTHANDARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, 2-வது பிரிவிலுள்ள உப பிரிவு (b) (i)-ல் '**roward**' என்ற வார்த்தைக்குப் பிறகு '**badli temporary or by any other name**' என்ற வார்த்தைகளைச் சேர்க்கவேண்டுமென்று என் திருத்தம் கூறுகிறது. '**Including an apprentice**' என்ற வார்த்தைகளை மட்டும் சேர்த்தால் போதாது. இந்தக் காலத்தில் பல தொழிற்சாலைகளில் பல தொழிலாளர்கள் பலவிதமான பெயர்களில் அழைக்கப்படுகிறார்கள். சில தொழிலாளர்கள் '**badli**' தொழிலாளர்கள் என்றும் சிலர் '**temporary**' தொழிலாளர்கள் என்றும் சிலர் கூலிகள் என்றும் சிலர் '**apperentices**' என்றும் அழைக்கப் படுகிறார்கள். முதலாளிகள் இவர்களுக்கு இம்மாதிரியான பெயர்களைக் கொடுத்து இவர்களுக்குக் குறைந்த கூலி கொடுக்கிறார்கள். எம்பளாயர் என்ற பதத்திற்கு விளக்கம் கொடுக்கப்பட்டிருக்கும் உப பிரிவில் '**whether called a managing agent, manager, superintendent or by any other name**' என்ற வார்த்தைகள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அதேபோல் இந்தப் பிரிவிலும் நான் குறிப்பிடும் வார்த்தைகளைச் சேர்க்க வேண்டும் என்று சொல்லிக்கொள்கிறேன். என்னுடைய கோரிக்கை மிகவும் நியாயமானது. என்னுடைய திருத்தத்தை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : கனம் சபாநாயகர் அவர்களே, உப பிரிவு (**g**) (**ii**) (**a**)-ல் '**any bonus**' என்ற வார்த்தைகள் இருக் கின்றன. எனவே, எந்த போனஸும் சம்பளத்துடன் சேர்ந்ததாகக் கருதப்பட மாட்டாது என்று மசோதாவில் கூறப்பட்டிருக்கிறது. சம்பளத்துடன் சேர்ந்ததாக எல்லாப் போனஸையும் கருத வேண்டுமென்று நான் சொல்லவில்லை. சில சமயங்களில் லாபத்தின் அடிப்படையில் போனஸ் கொடுக்கப்படுகிறது. அந்த போனஸை சம்பளத்துடன் சேர்ந்ததாகக் கருத வேண்டுமென்று நான் சொல்லவில்லை. அதைக் கூட "டெபர்ட் வேஜஸாக"க் கருதவேண்டுமென்று தொழிற் சங்கங்கள் சொல்லி

31st October 1958] [Sri M. Kalyanasundaram]

வருகின்றன. அப்படி இருக்கும்போது எந்த போனஸையும் சம்பளத்துடன் சேர்ந்ததாகக் கருதக்கூடாது என்று சொல்வது சரியல்ல. எனவே, உப பிரிவு (g) (ii) (a) யிலுள்ள வார்த்தைகளுக்குப் பிறகு '**based on profit**' என்ற வார்த்தைகள் சேர்க்கப்படவேண்டும் என்று சொல்லிக் கொள்கிறேன். நம் ராஜ்யத்தில் பல தொழிற்சாலைகளில், தொழிலாளர் களுக்குத் தொடர்ந்து 20 நாட்கள் வேலை செய்தால் இரண்டு தினங்களுக் கான கூலி வீதம் "அட்டென்டன்ஸ் போனஸ்" கொடுக்கப்பட்டு வருகிறது. அது ஒருவித போனஸ். இன்னும் சில தொழிற்சாலைகளில் தொழிலாளர் களுக்கு உற்பத்தி போனஸ் என்ற ஒரு போனஸ் கொடுக்கப்பட்டு வருகிறது. அப்படிப்பட்ட போனஸ்களாவது சம்பளத்துடன் சேர்ந்தவையாகக் கருதப் பட்டால்தான் தொழிலாளர்களுக்குப் பாதகம் ஏற்படாமல் இருக்கும். கொள்கைக்காகத்தான் இந்தக் கருத்தை நான் வலியுறுத்துகிறேன். ஏனென்றால், அந்த போனஸ் தொகையை ஒவ்வொரு தினத்திற்குமாகப் பிரித்தால் சராசரியாக தினத்திற்கு ஒரு அணா அல்லது இரண்டணாத் தான் தொழிலாளிக்குக் கிடைக்கும். சில போனஸ்களை சம்பளத்துடன் சேர்ந்த தாகக் கருதவேண்டுமென்று கூறப்பட்டு வரும்போது எந்த போனஸையும் சம்பளத்துடன் சேர்ந்ததாகக் கருதக்கூடாது என்று ஒரு சட்டத்தில் குறிப்பிடுவது உசிதமல்ல என்பதற்காகத்தான் இந்தக் கருத்தை நான் வலியுறுத்துகிறேன். என்னுடைய திருத்தத்தை ஏற்றுக்கொள்ளவேண்டு மென்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொண்டு என் வார்த்தையை முடித்துக் கொள்கிறேன்.

* **THE HON. SRI M. BHAKTAVATSALAM** : கனம் சபாநாயகர் அவர் களே, கனம் அங்கத்தினர் திரு. கோதண்டராமன் இப்போது பிரேரேபித் திருக்கும் திருத்தத்தை பொறுக்குக் கமிட்டியிலும் பிரேரேபித்தார். அதற்கு அவசியமில்லை என்பதை பொறுக்குக் கமிட்டியின் தலைவர் கனம் திரு.வெங்கடராமன் அப்போது விளக்கினார். "எம்ப்ளாயீ" என்ற பதம் டெம்பாரி தொழிலாளி, "பதிலி" தொழிலாளி ஆகிய எல் லோரையும் குறிக்கக்கூடிய முறையில்தான் அந்தப் பதத்திற்கு மசோதா வில் விளக்கம் கொடுக்கப்பட்டிருக்கிறது என்று கனம் திரு. வெங்கட ராமன் தெரிவித்தார். எனவே, கனம் அங்கத்தினர் குறிப்பிடும் திருத் தத்தை மசோதாவில் புகுத்த வேண்டியதில்லை என்று அரசாங்கம் கருதுகிறது. ஆகவே கனம் அங்கத்தினர் திரு. கோதண்டராமன் அவர் கள் பிரேரேபித்திருக்கும் திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்வதற்கில்லை.

கனம் அங்கத்தினர் ஸ்ரீ கல்யாணசுந்தரம் கொடுத்திருக்கும் திருத்தம் சம்பந்தமாக ஒன்று கூற விரும்புகிறேன். தொழில் சம்பந்தமான எல் லாச் சட்டங்களிலும் "வேஜஸ்" என்றால் என்ன என்று வரையறுக்கப் பட்டிருக்கிறது. அந்த விளக்கங்களுக்கொத்த முறையில் தான் இந்த மசோதாவில் "வேஜஸ்" என்ற பதத்திற்கு விளக்கம் கொடுக்கப்பட்டிருக் கிறது. இப்போது மசோதாவில் "வேஜஸ்" என்ற பதத்திற்கு நாம் கொடுக்கும் விளக்கம், இப்போது அமலிலிருக்கும் தொழிற் சட்டங்களில் அந்தப் பதத்திற்குக் கொடுக்கப்பட்டிருக்கும் விளக்கத்திற்கு முரண்பட்ட தாக இருக்கக்கூடாது. அந்தக் காரணத்தால் தான் உப பிரிவு (g) (ii) (a)-ல் "எந்த போனஸும்" என்று மட்டும் குறிப்பிட்டிருக்கிறோம்; அங்கே எந்தவிதமான போனஸ் சம்பளத்துடன் சேர்ந்ததாகக் கருதப் படக் கூடாது என்று விதித்தால், பின்னர் சிக்கல்கள் ஏற்படும். ஆகை யால் கனம் அங்கத்தினர் திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் பிரேரேபித் திருக்கும் திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்வதற்கில்லை என்று சொல்லிக் கொள்கிறேன்.

**SRI M. KALYANASUNDARAM** : நான் பிரேரேபித்திருக்கும் திருத் தத்தை கனம் அமைச்சர் ஏற்றுக்கொள்ளாவிட்டாலும், உப பிரிவு (g) (ii) (a)-யிலிருந்து '**any**' என்ற வார்த்தையை நீக்கிவிட்டு அங்கே '**bonus**' என்ற வார்த்தையை மட்டும் வைத்துக்கொள்ளலாம் என்று சொல் லிக்கொள்கிறேன்.

[31st October 1958

MR. SPEAKER : Where is the amendment? The hon. Member cannot suggest an amendment on the floor of the House.

* **THE HON. SRI M. BHAKTAVATSALAM** : மசோதாவில் அவ்வாறு திருத்தம் செய்ய வேண்டியதில்லை என்றும், கனம் அங்கத்தினர் கூறிய விஷயங்களை மனதிற் கொண்டு, பின்னர் விதிகளை வகுக்கும்போது தகுந்த முறையில் விதிகளை வகுப்போம் என்றும் சொல்லிக்கொள்கிறேன்.

The amendments were, by leave, withdrawn.

**Clause 2 was put and carried.**

*Clause* 3.

MR. SPEAKER : The motion is—

" That clause 2 do stand part of the Bill ".

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—

" *After* the figure, letter and word ' 15th August,' *add* the words and figure, " Tamil New Year Day and 1st May ', and *for* the words ' and five other ' *substitute* the words ' and six other ' ;"

The amendment was duly seconded.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

" (i) *For* the following words, letters and figures ' on the 26th January . . . other holidays ', *substitute* the words, letters and figures, ' on the 26th January, the 1st May, the 15th August the Deepavali, the Pongal and the Tamil New Year Days and 4 other holidays.'

and

(ii) *for* the existing proviso *substitute* the following :

' Provided that if in any of the industrial establishments more number of holidays are allowed such number shall not be reduced.

Provided further that where any one of the said three holidays happen to fall on a weekly holiday, another holiday in lieu thereof shall be allowed in consultation with the employees '."

The amendment was duly seconded.

MR. SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

* **SRI V. K. KOTHANDARAMAN** : கனம் சபாநாயகர் அவர்களே, தொழிலாளர்களுக்குத் தேசிய பண்டிகை தினங்களுக்காக அளிக்கும் விடுமுறை நாட்கள் மொத்தம் 10 நாட்களாக இருக்க வேண்டும் என்பது தான் என் திருத்தத்தின் நோக்கம். விடுமுறை கொடுப்பதற்குரிய தேசீய தினங்களுடன் தமிழ் வருடப் பிறப்பு தினத்தையும் மே தினத்தையும் சேர்க்க வேண்டும் என்பதும் பண்டிகைகளுக்காக விடுமுறை அளிக்க வேண்டிய நாட்கள் மொத்தம் ஆறு என்று விதிக்க வேண்டும் என்பதும் என் திருத்தத்தின் நோக்கங்கள். மே தினம் தொழிலாளர்களால் கொண்டாடப்படவேண்டிய தினம் என்பதை யாரும் மறுக்கவில்லை. அதே நேரத்தில், சர்வ தேசக் கண்ணோட்டம் உடையவர்கள்தான், மே தினத்தைத் தொழிலாளர்கள் கொண்டாடவேண்டுமென்று சொல்கிறார்கள் என்றும்

31st October 1958] [Sri V. K. Kothandaraman]

கூறப்படுகிறது. அந்த தினத்தைக் கொண்டாட வேண்டுமென்று திரு. ஜவஹர்லால் நேரு அவர்கள் கூடச் சொல்கிருர். அவர் சர்வதேசக் கண்ணேட்டம் உடையவரா ? அல்லாதவரா என்று சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

தமிழ் வருடப் பிறப்பு தினத்தையும் நம் ராஜ்யத்தில் தேசிய விடுமுறை தினமாக நிர்ணயிக்கவேண்டும். தொழிலாளர்களுக்கு அதிக நாட்கள் விடுமுறை அளித்தால் உற்பத்தி பாதிக்கப்படும் என்று சிலர் சொல்கிருர்கள். ஆனல் அதேநேரத்தில் மேலே நாடுகளில் தொழிலாளர்களுக்கு அதிக விடுமுறைகள் கொடுத்து முதலாளிகள் உற்பத்தியை அதிகரிக்கிருர்கள் என்பதை அறிகிறேம். விடுமுறை கொடுக்கப்படுவதால் தொழிலாளர்கள் புத்துணர்ச்சி பெறுகிருர்கள் என்ற கருத்தும் நிலவுகிறது. எனவேதான் பல நாடுகளில் முதலாளிகள் தொழிலாளர்களுக்கு அதிக விடுமுறைகள் அளித்து உற்பத்தியை அதிகப்படுத்துகிருர்கள் என்பதை அறிகிறேம். இதற்கு உதாரணமாக சோவியத் ரஷ்யாவையோ சீனவையோ நான் காட்டினல் அது ஆளும் கட்சியினருக்கு எட்டிக்காயாகவோ வேப்பங்காயாகவோ இருக்கும். இங்கிலாந்து அமெரிக்கா ஆகிய நாடுகளில்கூட முதலாளிகள் தொழிலாளர்களுக்கு அதிக விடுமுறைகள் அளித்து உற்பத்தியை அதிகப்படுத்துகிருர்கள் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். எனவே, தொழிலாளர்களுக்கு அதிக விடுமுறை நாட்கள் அளிக்கப்பட்டால், உற்பத்தியோ தொழிலாளிக்கும் முதலாளிக்கும் உள்ள உறவோ பாதிக்கப்படாது என்று தெரிகிறது. ஆகையால், தமிழ் வருடப் பிறப்பு தினத்தையும் விடுமுறைக்குரிய தினங்களுடன் சேர்ப்பதற்கு நாம் தயங்கவேண்டியதில்லை. தமிழ் வருடப் பிறப்பு தினத்திற்கு மிகவும் முக்கியத்வம் அளிக்கவேண்டும். பஞ்சாயத்துச் சட்டத்தில்கூட தமிழ் வருடப் பிறப்பிற்கு முக்கியத்துவம் அளித்திருக்கிறேம். பஞ்சாயத்துக்களின் 11–30 a.m. மெம்பர்கள் ஒரு தமிழ் வருடப் பிறப்பு தினத்தன்று பதவியேற்பார்கள் என்றும், மற்றெரு தமிழ் வருடப் பிறப்பு தினத்தன்று அவர்களுடைய பதவிக் காலம் முடிவடையும் என்றும் அச்சட்டத்தில் குறிப்பிட்டிருக்கிறேம். இந்த ராஜ்யத்திற்கு தமிழ் நாடு என்று பெயரிடுவதற்கு இந்த சர்க்கார் மறுப்பதால்தான் ஒரு வேளே தொழிலாளர்களுக்கு தமிழ் வருடப் பிறப்பு தினத்திற்கு விடுமுறை அளிக்கவும் மறுக்கிருர்களோ என்று நான் நினேக்கிறேன். தேசீய, பண்டிகை தினங்களுக்காக அளிக்கும் விடுமுறை நாட்களே 10 நாட்களாக அதிகரிப்பதற்கு வகை செய்யும் என்னுடைய திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

SRI N. K. PALANISAMI : கனம் சபாநாயகர் அவர்களே, நான் இந்தத் திருத்தத்தைக் கொடுத்திருப்பதற்கு முக்கிய காரணம், குறைந்தது 10 நாட்களாவது தொழிலாளர்களுக்கு விடுமுறை இருக்க வேண்மென்ற நோக்கத்தினுல்தான்என்று அமைச்சர் அவர்கள் சொன்னர்கள் லீவ் அதிகப்படியாகக் கொடுத்தால் உற்பத்தி பாதிக்கப்படும் என்று. அந்த விவாதத்தில் நான் இறங்க ஆசைப்படவில்லை. கூடுதல் மூன்று நாட்கள் விடுமுறை கொடுப்பதால் உற்பத்தி எந்த அளவு பாதிக்கப்படுகிறதோ அதற்கு அனுசரித்தாற்போல் ஏதாவது தினங்களில் கொஞ்ச நேரம் அதிகம் வேலே செய்ய தொழிலாளர்கள் ஒத்துக்கொண்டால் 10 நாட்கள் விடுமுறை விடுவதில் சர்க்காருக்கு கஷ்டம் ஒன்றும் இருக்காது என்று நினேக்கிறேன். அமைச்சர் அவர்கள் சொன்னர்கள், சில பேர்களுக்குப் பொங்கல் தினம் முக்கியமானதாக இருக்கும், சில பேர்களுக்கு கிருஸ்த்மஸ் முக்கியமாக இருக்கும், சில பேர்களுக்கு வேறு சில நாட்கள் முக்கியமாக இருக்குமென்று. ஆனல் எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய சில தினங்கள் இருக்கின்றன. அதாவது, பொங்கல் தினம், வருஷப் பிறப்பு இம்மாதிரி தினங்கள். வேண்டுமானல் மே தினத்தைப்பற்றியாவது, சர்க்காரின் திருத்தத்தை ஒத்துக்கொள்கிறேம். மெஜாரிட்டி தொழிலாளர்கள் விரும்பினல் அன்று விடுமுறை விடுவது என்பதை. பாக்கியுள்ள தினங்களே யாவது, பொங்கல் தினம், வருஷப் பிறப்பு, ஆயுத பூஜை போன்ற நாட்களுக்கு கண்டிப்பாக லீவ் கொடுத்தாகவேண்டும். அது மட்டுமல்ல.

தொழிலாளர்கள் என்று சொல்லும்போது அவர்கள் தொழில்தான் செய்ய வேண்டும், பாக்கியுள்ள விஷயங்களில் அவர்கள் தலையிடக்கூடாது என்று நினைப்பது சரியல்ல. அது தவறாகும். தேசம் முன்னேற வேண்டுமென்று சொல்கிறோம். அப்படி தேசம் முன்னேற வேண்டுமென்று சொல்கிற போது தொழிலாளர்களையும், மற்றவர்களையும் தள்ளி வைத்து விட்டு பாக்கியுள்ளவர்கள் மட்டும் முன்னேறவேண்டுமென்பதல்ல அதன் அர்த்தம். இம்மாதிரி தினங்களில் தொழிலாளர்களுக்கு லீவ் கொடுப்பதினால் அன்று அவர்கள் தங்கள் உழைப்பை, கவலைகளை மறந்து கலைகளிலும் கலாசாரத்திலும் அவர்களது மனதை ஈடுபடுத்தமுடியும் என்ற அடிப்படையில்தான் கொஞ்சம் அதிகமாக அவர்களுக்கு லீவ் கொடுக்க வேண்டுமென்று சொல்கிறேன். அதுமட்டுமல்ல. சர்க்கார் கொடுத்திருக்கக்கூடிய லீவ் தினங்கள் வீக்லி ஹாலிடேஸ்ஸில் விழுந்தால் அதைக் கணக்கில் எடுத்துக்கொள்ளக்கூடாது. அந்த நாளிற்குப் பதிலாக இன்னொரு நாள் லீவ் விட வேண்டுமென்பதுதான் எனது திருத்தம். இதை அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

* **Sri M. S. SELVARAJAN** : கனம் சபாநாயகர் அவர்களே, கம்யூனிஸ்ட் கட்சி அங்கத்தினர் பழனிசுவாமி அவர்கள் மூன்றாவது பிரிவிற்கு கொடுத்திருக்கக்கூடிய திருத்தத்தை அரசாங்கம் ஏற்றுக்கொண்டால் இந்த தேசத்தில் உள்ள எல்லாவிதமான மதங்களுக்கும், மதாபிமானிகளுக்கும் சரிசமமான உரிமைகளை வழங்குவது என்ற லட்சியத்திற்கு தன்னை அர்பணித்துக் கொண்டிருக்கும் தேசம் அதற்கு புறம்பாகப்போக வேண்டுமென்று கம்யூனிஸ்ட் கட்சி அங்கத்தினர் விரும்புகிறார் என்பதற்கு இது ஒரு அத்தாட்சியாகும் என்று சொல்லிக்கொண்டு, அதற்கு நாமும் உடந்தையாகக்கூடும், ஆகவே இதை ஏற்றுக்கொள்ளக்கூடாதென்று நான் முதலில் கேட்டுக்கொள்கிறேன். ஹிந்துக்கள் புனிதமாக கருதக்கூடிய தீபாவளி, சங்கராந்தி போன்ற பண்டிகைகளுக்கு லீவ் வேண்டுமென்று சொன்னார். அதேபோல், இந்த நாட்டில் தொழிலாளர்களும் சரி அல்லது தொழில் அதிபர்களானாலும் சரி, மற்ற மத அபிமானிகளும், மற்ற மதங்களைச் சார்ந்தவர்கள் அவர்களுக்கு புனிதமாகவுள்ள நாட்களுக்கு அவர்களும் லீவ் கேட்பார்கள். கிருஸ்தவர்கள் கிருஸ்மஸ்க்கு லீவ் வேண்டுமென்பார்கள், முஸ்லீம் சகோதரர்கள் ரம்ஸானுக்கு லீவ் வேண்டுமென்று கேட்பார்கள். அப்பொழுது அவர்கள் கேட்கிற நாட்களுக்கு விடுமுறை அளிக்கவில்லையென்றால் சரிசமமான உரிமை எல்லோருக்கும் அளிக்கப்பட வேண்டுமென்ற கொள்கை பாதிக்கப்படும். ஐந்து நாட்கள் விடுமுறை என்பதை தொழிலாளர்கள் தாங்கள் விரும்புகிற போது பெற்றுக்கொள்ளலாம் என்று இதில் விதி இருப்பதே சர்க்காரின் நல்லெண்ணத்தினால்தான். ஆகவே, கம்யூனிஸ்ட் கட்சி அங்கத்தினர் அவர்கள் சொல்வதை நாம் ஏற்றுக்கொண்டால் சமநோக்கு கொள்கையிலிருந்து நாம் பிரள்வதாக இருக்கும். அடுத்தபடியாக, இங்கு வேறொன்று பிரஸ்தாபிக்கப்பட்டது. மே தினம் என்பது உலகத்திலுள்ள தொழிலாளர்கள் தொழிலுக்குக் காட்டும் மரியாதை தினம், என்று. தொழிலுக்கு ஏற்றம் கண்ட தினம் என்று சொல்லப்படுகிறது. தொழிலுக்கு மரியாதை செய்யவேண்டுமென்று விரும்பினால் அதை ஓய்வு நாளாக் கொண்டாடக் கூடாது. அப்படி அதை ஓய்வு நாளாக கொண்டாடினால் அது தொழிலாளர்கள் ஓய்வுக்குக் கொடுக்கும் மரியாதையாக மட்டுமே ஆகும். ஆகவே, அன்று தொழிலுக்கு மரியாதை கொடுக்கும் தினம் என்று கருதப்பட்டால் அன்றுதான் தொழிலாளர்கள் மனம் விட்டு நன்கு தொழில் செய்ய வேண்டும். ஆகவே, அன்று நிச்சயமாக வேலை செய்யவேண்டுமென்று விரும்புகிறவர்களை வேலை செய்வதில் இருந்து நாம் தடை செய்யக் கூடாது. ஆகவே அத் தினத்தை ஓய்வு தினமாகக் கருதாமல் அதை ஒரு தொழில் தினமாகக் கருதி அந்த ரூபத்தில் அரசாங்கம் 'இம் மசோதாவை அமைத்திருப்பது வரவேற்கத் தக்கது என்று கூறிக்கொண்டு இதை ஏற்றுக் கொள்ளக் கூடாதென்று கேட்டுக்கொள்கிறேன்.

31st October 1958]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சபாநாயகர் அவர்களே, ஸ்ரீ கோதண்டராமன் அவர்கள் கொடுத்திருக்கும் திருத்தத்தைப் பற்றி முன்பே நான் விளக்கியிருக்கிறேன். மூன்று நாட்களுக்கு கூட விடுமுறை நாட்களை அதிகப்படுத்த வேண்டுமென்பதுதான் அவர்களது திருத்தம். ஏழு நாட்கள் லீவ் என்பது பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. இது, நீண்டகாலமாக விவாதிக்கப்பட்டு ஏழு நாட்களாவது கொடுத்து விட வேண்டுமென்று வற்புறுத்தப்பட்டு வந்தது. அதற்குமேல் கொடுப்பது என்றால், எத்தனை நாட்கள் கொடுத்தாலும் நல்லதுதான், விடுமுறை அனுபவிப்பவர்களுக்கு. ஆக, இந்த விடுமுறை நாட்களை அதிகப்படுத்துவது என்பது சரியல்ல. ஆகவே, நான் அதை எதிர்க்கிறேன். அடுத்தபடியாக, பழனிசுவாமி அவர்களின் திருத்தம், இப்பொழுது அவர்களுக்குள்ள உரிமைகள் பாதிக்கப்படக்கூடாதென்பது. அதைப்பற்றி இந்த மசோதாவின் 11-வது பிரிவில் குறிப்பிடப் பட்டிருக்கிறது. தற்காலம் தொழிலாளர்கள் என்னென்ன விசேஷ சலுகைகளை அனுபவித்துக் கொண்டு வருகிறார்களோ அதற்கு எந்த விதத்திலும் பாதகம் ஏற்படாது. 11-வது பிரிவு அதை விளக்குகிறது. ஆகவே, இந்தத் திருத்தத்திற்கும் அவசியமில்லை. மற்றொன்று, பண்டிகை நாட்கள் விடுமுறை நாட்களில் வந்து விட்டால், ஞாயிற்றுக்கிழமைகளில் வந்து விட்டால் அதற்காக வேறு ஒரு நாள் லீவ் விட வேண்டுமென்று சொல்லப்பட்டது. அதற்கு, ஒரு திருத்தம் வேண்டியதில்லை. ஆனால் தேசிய தினங்களைப் பொறுத்த மட்டில், ஜனவரி 26-ம் தேதி, ஆகஸ்ட் 15-ம் தேதி இவைகள் ஞாயிற்றுக் கிழமைகளில் வந்தாலும் அதற்காக வேறு ஒரு நாளில் விடுமுறை விட வேண்டுமென்று சொல்வது சரியல்ல. எந்த தினத்தில் அவைகள் வருகின்றனவோ அந்த தினங்களில்தான் அவைகள் கொண்டாடப் படவேண்டும், அந்த தினங்களை இன்னொரு நாளில் கொண்டாடலாம் என்று சொல்வது சரியல்ல. அவைகளை அன்றுதான் கொண்டாட முடியும். தீபாவளி, பொங்கல் போன்றவைகள் விடுமுறை நாளில் வந்து விட்டால், அதாவது ஞாயிற்றுக்கிழமையன்று வந்து விட்டால், ஆண்டு தொடக்கத்திலேயே வேறு விடுமுறை நாளை இன்னொரு நாள் என்று வைத்துக் கொள்ளலாம். அவ்வாறு பண்டிகை விடுமுறை நாட்கள் மொத்தம் ஐந்து நாட்கள் இருக்கலாம் என்பதுதான் இந்த மசோதாவின் நோக்கமாகும். அவைகளை வருஷந்தோறும் நிர்ணயித்துக் கொள்ளலாம். ஆகவே, இத்திருத்தத்திற்கு அவசியமில்லை.

The amendments were put and lost.

Clause 3 was put and carried.

Clause 4 was put and carried.

*Clause* 5.

MR. SPEAKER : The motion is—

"That clause 5 do stand part of the Bill."

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—

"In sub-clause (2) (*a*), *after* the words 'twice the wages' *add* the words 'and dearness allowance' and in sub-clause (3) (ii) *for* the words 'thirty days' occurring in the proviso *substitute* the words 'twenty days'."

SRI N. MARUDACHALAM : I second the amendment, Sir.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

"In the proviso to sub-clause (3) (ii) *omit* the following words :—

'if he has not completed . . . such holidays'."

SRI V. K. KOTHANDARAMAN : I second the amendment, Sir.

SRI M. KALYANASUNDARAM : Sir, I move—

"*For* sub-clause 3 (i), *substitute* the following, namely :—

'only at a rate equivalent to the daily average of his wages to be calculated in the prescribed manner'."

SRI N. K. PALANISAMI : I second the amendment, Sir.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், 5-வது கிளாஸில் சப் கிளாஸ்-2-ஏயில் "twice the wages" என்றிருக்கிறது. இதில் டீயர்னஸ் அலவன்-ஸை சேர்க்கவேண்டும் என்பது தான் என்னுடைய திருத் தத்தின் நோக்கம். ஏன் இதைச் சொல்லுகின்றேன் என்றால் இன்றைக்கு சட்டங்கள் எல்லாம் வார்த்தைக்கு வார்த்தை, எழுத்துக்கு எழுத்து சரியாக இல்லாவிட்டால் பின்னால் வேறு விதமாக வியாக்கியானம் செய்யப் பட்டு சட்டத்தின் நோக்கத்திற்கே விரோதமாகப் போய்விடுகிறது. இது நான் சொல்லாமலே அமைச்சர் அவர்களுக்குத் தெரியும். ஆகவே இதோடு "டீயர்னஸ் அலவன்ஸ்" என்பதையும் சேர்க்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அடுத்தபடியாக சப்கிளாஸ் 3 (2)-ல் 30 தினங்கள் தொடர்ந்தாற்போல் வேலை செய்தவர்களுக்குத்தான் விடுமுறை கிடைக்கும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்படியிருக்குமானால் தொழிலாளர் களுக்குப் பலவிதமான கஷ்டங்கள் ஏற்படலாம். அதாவது லீவ் லெட்டர் எழுதிக்கொடுத்து லீவ் கொடுக்கப்பட்ட பிறகும் கூட ஆப்ஸெண்ட் என்று போடப்படுகிறது சில நிறுவனங்களில். இவ்விதமான பல தொல்லைகள் நேரிடுவதற்கு வழியிருக்கிறது. ஆகவே தொடர்ந்து 30 தினங்கள் வேலை செய்திருக்கவேண்டும் என்பதை எடுத்துவிட்டு 20 தினங்கள் என்றாவது வைத்துக்கொள்ளவேண்டும் என்பதுதான் என்னுடைய திருத்தத்தின் நோக்கம். ஆகவே இதை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

SRI N. K. PALANISAMI : சபாநாயகர் அவர்களே, இந்த நல்ல மசோதாவில் ஒரு பெரிய குறை இருக்கிறது. அதாவது 30 நாட்கள் தொடர்ந்தாற்போல் வேலை செய்தால்தான் விடுமுறை கொடுக்கப்படும் என்று இருக்கிறது. இம்மாதிரியான விடுமுறை கொடுக்கவேண்டும் என்று கோயம்புத்தூர் ஜில்லாவிலுள்ள பல மில்களிலும் இருந்து வருகிறது ஒரு வருடமாக. அதிலும் பல தகராறுகளும் தவறுகளும் ஏற்படுகின்றன. அதோடு இந்த விடுமுறை நாட்கள் அப்ரெண்டிஸ், டெம்பரரி வொர்க் கர்ஸ் போன்றவர்களுக்குக் கிடைக்குமா என்பது தெரியவில்லை. அதோடு பல தொழிலாளர்கள் ஸிக் லீவில் இருக்கலாம். அவர்களுக்கு இந்த லீவு கிடைக்குமா என்று தெரியவில்லை. ஆகவே 30 தினங்கள் வேலை செய்தால்தான் விடுமுறை கிடைக்கும் என்பதை எடுத்துவிடவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : ஸார், என்னுடைய திருத்தத்தை ஏற்றுக்கொள்ளலாம் என்று அமைச்சர் அவர்கள் உறுதியளித்திருக் கிறார்கள். ஆகவே நான் இதைப்பற்றி அதிகமாக விளக்கவேண்டிய அவசியமில்லை என்று நினைக்கிறேன். இருந்தாலும் விடுமுறை தினத் திற்கு எந்த அடிப்படையில் சம்பளத்தை நிர்ணயிப்பது என்பதைச் சொல்லு வதற்காகத்தான் இந்தத் திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். தொழி லாளர்களுக்கு சில சமயங்களில் வருமானத்திற்கேற்ப சம்பளங்கள் குறைந்து போய்விடும். அதிலிருந்து அவர்களைப் பாதுகாக்கவேண்டும் என்பதுதான் என்னுடைய விருப்பம். அவர்களாகவே ஆப்செண்டாக இருக்கிற சமயத்தில் சம்பளம் கொடுக்கப்படவேண்டும் என்பது அல்ல என்னுடைய எண்ணம். சர்க்காருடைய விதிகளில் இந்த காலத்தின் சம்பளம் எந்த அடிப்படையில் நிர்ணயிக்கப்பட வேண்டும் என்பதை விதிகளில் குறிப்பிடப்பட வேண்டும் என்பதுதான் என்னுடைய திருத் தத்தின் நோக்கம். அதாவது சப்கிளாஸ் 3-ல் 1-வது பிரிவில் இப்போது

31st October 1958] [Sri M. Kalyanasundaram]

இருப்பதை மாற்றி **" Only at a rate equivalent to the daily average of his wages to be calculated in the prescribed manner "** என்று அமைக்க வேண்டும் என்பதுதான் என்னுடைய திருத்தம். இதை அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் சபாநாயகர் அவர்களே, வேஜஸ் என்றால் அதில் பஞ்சப்படி என்பதையும் சேர்க்க வேண்டும் என்று சொன்னார்கள். இதைப்பற்றி இரண்டாவது கிளாஸில் (அதாவது டெபினிஷன் கிளாஸில்) தெளிவாக சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே இதில் தனியாகச் சேர்க்கவேண்டும் என்பது அவசியமில்லை என் பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். அடுத்தபடியாக குறைந்தபட்சம் 30 தினங்களாவது வேலை செய்திருக்கவேண்டும் என்பது வேண்டியதில்லை, நேற்று வந்தாலும் சரி அவர்களுக்கும் விடுமுறை கொடுக்கவேண்டும் என்று சொல்லுகிற கருத்தை நான் ஏற்றுக்கொள்ளமுடியாது என் பதையும் தெரிவித்துக்கொள்கிறேன். கனம் அங்கத்தினர் கல்யாணசுந் தரம் அவர்கள் மற்றொரு திருத்தம் கொடுத்திருக்கிறார்கள். வேலை செய்யாமல் அவர்களாகவே ஆப்செண்ட்டாக இருந்தால் " லே-ஆப் " சம்பள முறையில் கொடுக்கவேண்டும் என்று திருத்தம் கொடுத்திருக் கிறார்கள். அதை நான் ஒத்துக்கொள்கிறேன். இதைப்பற்றி விரிவாக விதிகளில் மாற்றம் செய்து கொள்ளலாம் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

MR. SPEAKER : Is hon. Member Sri Palanisami withdrawing his amendment?

SRI M. KALYANASUNDARAM : He is not pressing his amendment, Sir.

MR. SPEAKER : What is the difference between withdrawing and not pressing? In any case I will have to get the permission of the House.

The amendments of Sri V. K. Kothandaraman, and Sri N. K. Palanisami were, by leave, withdrawn.

MR. SPEAKER : I think the Government are accepting the amendment moved by Sri M. Kalyanasundaram. I shall put it to vote. The question is—

" *For* sub-clause (3) (i), *substitute* the following, namely :—

' only at a rate equivalent to the daily average of his wages to be calculated in the prescribed manner '."

The amendment was put and carried.

Clause 5, as amended, was put and carried.

Clauses 6 to 9 were put and carried.

*Clause* 10.

MR. SPEAKER : The motion is—

" That clause 10 *do* stand part of the Bill."

SRI V. K. KOTHANDARAMAN : Sir I move—

" *Omit* sub-clause (1)."

SRI N. MARUDACHALAM : I second the amendment, Sir.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

(1) *Omit* sub-clause (1) (*a*).

(2) In sub-clause (1) (*c*), *omit* the words 'any industrial establishment . . . Reserve Bank of India.'

(3) *Omit* sub-clause (1) (*d*).

(4) *Omit* sub-clause (2).

MR. SPEAKER : The amendment falls through for want of a seconder.

**SRI V. K. KOTHANDARAMAN :** *ஸார், இந்த* **10-வது** கிளாஸில் *சர்க்கார் நிறுவினங்களில் வேலை பார்க்கும்* தொழிலாளர்களுக்கு விதி விலக்கு *அளிக்கப்பட்டிருக்கிறது.* இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் *அடிப்படையில்* இருக்கும் *லேபர் பாலிஸிக்கு நேர்விரோதமாக* இருக்கும் *என்பதை உணர்ந்து* இதில் *கொடுக்கப்பட்டிருக்கும்* விதிவிலக்கை *எடுத்துவிடவேண்டும் என்று* திருத்தம் கொடுத்திருக்கிறேன். தயவு செய்து இதை *ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று* கேட்டுக்கொள்கிறேன்.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** *நான்* இதற்கு *முன்பு குறிப்பிட்டிருக்கிற காரணத்தின்படி* இந்தத் திருத்தத்தை *ஏற்றுக்கொள்ள முடியாது என்பதைத்* தெரிவித்துக்கொள்கிறேன்.

The amendment of Sri V. K. Kothandaraman was put and lost.

Clause 10 was put and carried.

*Clause* **11.**

MR. SPEAKER : The motion is—

"That clause **11** *do* stand part of the Bill."

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—

"*For* the words 'on the date' *substitute* the words 'before and after the date'."

SRI N. MARUDACHALAM : I second the amendment, Sir.

**SRI V. K. KOTHANDARAMAN :** *ஸார், இந்தச் சட்டம்* அமுலான தேதி *முதற்கொண்டு,* இதற்கு *முன்னால்* அதிகப்படியான விடுமுறை கொடுக்கப்பட்டிருந்தால் அதுவும் நடைமுறையில் இருக்கும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. என்னுடைய திருத்தம் என்னவென்றால் இந்தச் சட்டம் வந்ததின் பின்னாலும் ஏதாவது அக்ரிமெண்ட் மூலம் 7 தினங்கள் விடுமுறை என்பதற்குப் பதிலாக 10 தினங்கள் விடுமுறை என்றோ அல்லது 15 தினங்கள் விடுமுறை என்றோ ஏற்படுத்திக்கொண்டால் அதையும் ஒப்புக்கொள்ளலாம் என்றிருக்கவேண்டும். ஆகவே என் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

* **THE HON. SRI M. BHAKTAVATSALAM :** இப்போது தொழிலாளர்கள் அனுபவித்து வருகிற சலுகைகளைப் பாதிக்கக்கூடாது என்று அதற்கு வேண்டியபடி அமைக்கப்பட்டிருக்கிறது. பின்னால் இதைவிட, அதிகச் சலுகைகளை, தொழிலாளர்களும், தொழில் அதிபர்களும் சேர்ந்து இன்னும் எத்தனை சலுகைகளை வேண்டுமானாலும் அமைத்துக்கொள்ள

31st October 1958] [Sri M. Bhaktavatsalam]

லாம். இதைச் சட்டத்திலேயே போடவேண்டுமென்பது சரியல்ல. ஆகையால் கனம் அங்கத்தினர் அவர்களை இந்தத் திருத்தத்தை வற்புறுத்த வேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன்.

The amendment was put and lost.

Clause 11 was put and carried.

Clause 12 was put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move—

"That the Madras Industrial Establishments (National and Festival Holidays) Bill, 1958 (L.A. Bill No. 19 of 1958), as amended, be passed."

**SRI N. K. PALANISAMI** : கனம் சபாநாயகர் அவர்களே, என்னுடைய 10-வது பிரிவிற்கான திருத்தத்தைப் பிரேரேபித்தவுடன் பக்கத்து அங்கத்தினர் செகண்ட் பண்ணி எழுந்தும் "ஸ்பீக்கர்ஸ் ஐ" சரியாக இல்லாத காரணத்தால் . . . .

MR. SPEAKER : I am sorry. I waited for two full minutes. If his supporters are not active, I cannot help. My eye is all right. (laughter). Only the quickness of support was not there.

**SRI N. K. PALANISAMI** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த தேசிய விடுமுறை தினங்களும் பாக்கி சர்க்கார் விடுமுறை நாட்களும் ஏற்கெனவே பாங்குகளில் வேலை செய்யக்கூடியவர்களுக்குக் கிடைப்பதில்லை. அவர்களுக்கு வீக்லீ ஹாலிடேஸ்கூட கிடையாது. ஸ்டேட் பாங்க், சென்ட்ரல் பாங்க், இவைகளுக்குத்தான் வீக்லீ ஹாலிடேஸ் இருக்கிறதே தவிர, சாதாரண பாங்குகளில் வேலை செய்யக்கூடிய குமாஸ்தாக்களுக்கு கிடையாது. பம்பாயை எடுத்துக்கொண்டால் அங்கு வாராந்திர விடுமுறை இருக்கிறது. சென்னையில் மட்டும் ஷாப் எஸ்டாப்லிஷ்மெண்ட்ஸ் ஆக்ட் இருந்தபோதிலும் அவர்களுக்கு வாராந்திர விடுமுறை சரியாகக் கிடைப்பதுகிடையாது. அவர்களுக்கு என் விதிவிலக்கு அளிக்கவேண்டுமென்று தெரியவில்லை. அவர்களுக்கும் அவசியம் விடுமுறை கொடுக்க வேண்டும். அவர்களுக்கும் கொடுத்து இந்த மசோதா ஒரு வெற்றிகரமான மசோதாவாக இருக்கவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

* **SRI S. PAKKIRISAMI PILLAI** : கனம் சபாநாயகர் அவர்களே, நண்பர் கோதண்டராமன் அவர்கள் தன்னுடைய திருத்தத்திலே ஒன்றை வற்புறுத்திப் பேசினார்கள். சில கம்பெனிகளில் சில தொழிற்சாலைகளில் இந்த மாதிரியான ஒரு சட்டத்தை அனுசரணையாக வைத்துக்கொண்டு, குறைந்தபட்சம் 7 நாட்கள்தான் பண்டிகை நாட்களாக இருக்கவேண்டும் என்று வற்புறுத்துவார்கள். அந்தக் கம்பெனிகளிலே—அல்லது தொழிற்சாலைகளிலே—அதிகப் படியான விடுமுறை நாட்கள் வாங்க முடியும், அதிகமான பண்டிகை லீவு வசதிகள் கொடுப்பதற்கு நிலைமை வசதியாக இருக்கலாம். வேண்டுமானால் கோர்ட்டுக்குப் போய் தொழில் கோர்ட்டுக்குப் போய், சச்சரவு ஏற்படுத்தி, தீர்ப்பு வாங்குவதற்குள்ள வசதி இந்தச் சட்டத்தின் மூலமாகப் பாதிக்கப்படுமா என்பதை இங்கே நான் கேட்டுத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

சில தொழிற்சாலைகளில் நாம் கோரிக்கை போட்டு அதிக வசதி வாங்குவது போல பண்டிகை நாட்களை அதிகமாக வாங்க முடியுமானால், அதை வாங்குவதற்கு ஏதாவது தடை இருக்குமா என்று அமைச்சர் மூலமாகத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

[31st October 1958

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் திரு. பழனிசாமி அவர்கள் பாங்குகளைப் பற்றிக் குறிப்பிட்டார். இந்த மசோதாவிலே ரிஸர்வ் பாங்கு என்றுதான் குறிப்பிடப்பட்டிருக்கிறது. மற்ற பாங்குகளுக்கு விதிவிலக்கு இல்லை. மற்ற பாங்குகளுக்கு விலக்கு இல்லை என்று கனம் அங்கத்தினருக்குத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

கனம் அங்கத்தினர் பக்கிரிசாமி பிள்ளை ஒரு பிரச்னையைப்பற்றிக் குறிப்பிட்டார். பின்னால் தொழிலாளர்கள் வேறு புதிய சலுகைகளைப் பெறவேண்டுமென்றால் விடுமுறையைப் பொறுத்த மட்டில் எவ்வளவு தூரம் பாதிக்கும் என்று கேட்டார்கள். குறைந்த பட்சம் இந்த விடுமுறை கூட இல்லாதவர்களுக்கு அளிக்கவேண்டுமென்றுதான் இந்தச் சட்டம் கொண்டுவரப்பட்டிருக்கிறது. குறைந்த பட்சம் இவ்வளவு இருக்கவேண்டுமென்றுதான் இருக்கிறது. இதை வைத்துக்கொண்டு நிலைமையைப் பொருத்து, சாமார்த்தியம் இருந்தால் புதிய சலுகைகளைப் பெற பிரயத்தனம் செய்யலாம். இருந்தாலும் கனம் அங்கத்தினர்கள் இந்த எழு நாட்களாவது கொடுக்கவேண்டுமென்று கொண்டுவரப்பட்டிருக்கும் இந்தச் சட்டத்தைப்பாராட்ட வேண்டும்.

MR. SPEAKER : The question is—

"That the Madras Industrial Establishments (National and Festival Holidays) Bill, 1958 (L.A. Bill No. 19 of 1958) as amended, be passed."

The motion was put and carried and the Bill as amended was passed.

(2) THE MADRAS ESTATES (ABOLITION AND CONVERSION INTO RYOTWARI), ESTATES LAND (REDUCTION OF RENT) AND ESTATES (SUPPLEMENTARY) (AMENDMENT) BILL, 1958 (L.A. BILL NO. 35 OF 1958).

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move :

"That the Madras Estates (Abolition and Conversion into Ryotwari), Estates Land (Reduction of Rent) and Estates (Supplementary) (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 35 of 1958) be taken into consideration."

The amendments proposed are found necessary as a result of the experience gained in the working of the Estates Abolition Act. Certain consequential amendments to the Madras Estates Land (Reduction of Rent) Act, 1947 and the Madras Estates (Supplementary) Act, 1956, are also proposed to be made. The various clauses of the Bill are explained in detail in the Statement of Objects and Reasons attached to the Bill. I shall now explain briefly the several Clauses of the Bill.

*Clause* 2.—Clause 2 seeks to amend section 8 (2) of the Abolition Act, so as to transfer the work of the two Estates Abolition Tribunals to the District Courts, with a view to abolish the Tribunals. The District Courts, will however be styled as Tribunals for the purposes of the Act. The clause also seeks to amend section 8 (4) of the Abolition Act, so as to empower the Tribunals with all the powers of Civil Courts. As the present Estates Abolition Tribunals are also performing certain functions under the Rent